# வெற்றியின் மூலதனம்

☐ இளைஞர்க்கு ☐ ஆசிரியர்க்கு ☐ பெற்றோர்க்கு ☐

கவிஞாயிறு

**தாராபாரதி**



**அறிவுநிதி பதிப்பகம்**

(சிபி எழுது பொருள் அங்காடி வளாகம்)

10 - ரங்கன் தெரு

மதுராந்தகம் - 603 306

☎ 954115 256346

கவிஞாயிறு தாராபாரதி

**வெற்றியின் மூலதனம்**

கல்விச் சிந்தனைக் கட்டுரைகள்

தொகுப்பாசிரியர் :

**ஓவியக்கவிஞர் மலர்மகன்**

முதற் பதிப்பு :

திருவள்ளுவர் ஆண்டு 2036 வைகாசி - ஜூன் 2005

☐ டெமி ☐ பக்கங்கள் 112 ☐ விலை ரூ.40

பதிப்பாசிரியர்:  **இனியவன்**

அட்டை வடிவமைப்பு :

**மு. கலைவாணன் - க. பகலவன்**

ஒளி அச்சு :

**கலை கணினியகம்**

கடை எண் : 3 - ஐசுவரியா வளாகம், 7 - துரைசாமி சாலை,

தியாகராய நகர், சென்னை - 600 017

பேசி : 94441 47373

அச்சு :

**மணிவாசகர் ஆஃப்செட் பிரிண்டர்ஸ்**

சென்னை - 600 001

வெளியீடு :



**அறிவுநிதி பதிப்பகம்**

(சிபி எழுது பொருள் அங்காடி வளாகம்)

10 - ரங்கன் தெரு, மதுராந்தகம் - 603 306

☎ 954115 - 256346 & 09443484174

# புதிய தலைமுறைக்கு
# ஒரு
# பூபாளம்

வா,
அறிவியல் தமிழனாய் - நீ
அவதாரம் எடுத்தால்தான்
பொறியியல் உலகம்உன்
புலமையைப் பாராட்டும்!

வா,
புது வேகத்தோடு நீ
புறப்படு - உன் உள்ளங்கை
விதிரேகை என்பதனை
விஞ்ஞான ரேகையாக்கு!

# காலத்தை வென்ற கவிஞர் தாராபாரதி

☐ இலக்கியவீதி **இனியவன்**

'**எ**ட்டயபுரத்துக் கவிஞன் தன் எழுதுகோலில் விட்டு வைத்த மையின் மிச்சத்தை என் எழுதுகோலில் நிரப்பிக்கொண்டு எழுதுகிறேன்' என முழங்கி எழுதத் தொடங்கிய கை ஓய்ந்துவிட்டது.

''காலம் கடந்துவிடவில்லை. வாருங்கள், நம்மைப் புதுப்பித்துக் கொண்டு நடப்போம். தேசப்படத்தின் தூசுகளைத் துடைப்போம். இதயத்தில் உரத்த சிந்தனை வரும்போது, இரத்த ஓட்டத்தில்கூட மின்சாரம் தயாரிக்கலாம்! அந்தத் 'தூண்டு மின்சாரம்' மனித எந்திரங்களை இயக்கும்போது, பூமிக்குப் புதிய ஒளி கிடைக்கும். இந்த உண்மை ஒளியின் உதயத்தை நம்மிடமிருந்து வாங்கி ஒளி பரப்பத்தான் 'கிழக்கு' காத்திருக்கிறது'' என நம்பிக்கையூட்டிய குரல் இனி ஒலிக்க வாய்ப்பில்லை.

'கவிஞர் தாராபாரதி இன்று நம்மிடம் இல்லை' என்கிற உண்மை மிகவும் இம்சையானது.

இவரைப் பொறுத்தவரை, 'ஈடு செய்ய முடியாத இழப்பு' என்பது சம்பிரதாயச் சொற்களல்ல; சத்தியமான தொடர்.

இந்தக் காலத்தில், ஐம்பத்து மூன்று வயதென்பது சாவுக்கான சராசரி வயதல்ல.

சதாகாலமும் சமுதாயத்திற்குத் தொண்டு செய்து கொண்டிருந்ததால் -

உடல் நலம் மறந்து உழைத்ததால் -

இவர், 'மீண்டும் விழிக்க முடியாத உறக்கத்தில்' விரைவில் அமிழ்ந்து போனார்.

பாரதி பரம்பரை, பாரதிதாசன் பரம்பரை என்கிறாற் போல் -

'இலக்கியவீதி தலைமுறை'யின் இணையற்ற கவிஞர் தாராபாரதி, பன்முகத் திறன் நிறைந்த பண்பாளர்.

கல்லூரிப் பேராசிரியருக்கான கல்வித் தகுதிகள் இவரிடம் இருந்தாலும், கிராமத்துத் தொடக்கப் பள்ளிகளில் பணியாற்றுவதையே தம்முடைய வாழ்க்கைக் கடமையாய்க் கொண்டார்.

இவர் பணியாற்றிய பள்ளிகள் எல்லாம் அழகிய முன்மாதிரிப் பள்ளிகள் ஆயின!

வேடன்தாங்கலைச் சார்ந்த சித்திரக்கூடம், செங்கல்பட்டைச் சார்ந்த பரனூர், கூடுவாஞ்சேரியைச் சார்ந்த காமராசபுரம் ஆகிய ஊர்ப் பள்ளிகள் இவரால் உன்னதமான பள்ளிகளாயின!

ஆயிரக்கணக்கான தாழ்த்தப்பட்ட - பிற்படுத்தப்பட்ட மாணவர்களை இவர் மிக உயரத்திற்குக் கொண்டு சென்றிருக்கிறார்!

இதற்காக, பள்ளி நேரம் போக ஒவ்வொரு நாளும் பல மணிநேரம் பாடுபட்டிருக்கிறார்!

எந்த எதிர்பார்ப்பும் இல்லாமல் பாடுபட்டிருக்கிறார்;

அர்ப்பணிப்புடன் பாடுபட்டிருக்கிறார்!

எனவேதான், இந்த நல்லாசிரியருக்கு அஞ்சலி செய்ய ஏராளமான இளைஞர்களும், அவர்கள் குடும்பத்தினரும் வந்து குழுமினர்; கல்வி இயக்குநர்களும், கல்வியாளர்களும் வந்து கலங்கினர்!

''நல்லாசிரியர் தாராபாரதி, மிக நல்ல கவிஞராகவும் சமுதாய மதிப்புப் பெற்றிருக்கிறவர். இவர் வேறு; இவர் கவிதைகள் வேறல்ல!'' என்று கவிஞர் ஈரோடு தமிழன்பன் நெகிழ...

''வெறுங்கை என்பது மூடத்தனம்..... உன் விரல்கள் பத்தும் மூலதனம்' என்கிற தன்னம்பிக்கை வரிகளே என்னை இங்கே வரவழைத்திருக்கின்றன!'' என இலக்கியச்செல்வர் குமரி அனந்தன் இதயம் நிறைந்த சோகத்துடன் இறுதி அஞ்சலி செய்ய...

''என்னைவிடக் கூர்த்த மதி படைத்தவன்.... அண்ணாமலை ரெட்டி போல இவன் இளமையில் இறக்க, நான் இருக்கிறேனே...'' என உவமைக் கவிஞர் சுரதா உளம் வெதும்ப...

''நாட்டில் ஆயிரம் கவிஞர்கள் இருக்கலாம்... ஆனால், இவரைப் போல் ஒரு 'மனித'ரைக் காண்பது அரிது!'' என அறிஞர் சிலம்பொலி செல்லப்பன் அகமார அரற்ற....

'இலக்கியவீதி'யில் பதின்கவனகர் இராமையாவிற்கு நடந்த இரங்கல் கூட்டத்தை நினைவூட்டிப் பேசிய அவர் மகன் பதினாறு கவனகர் கனக சுப்புரத்தினம், ''கவனகக்

கலையைத் தமிழ்நாட்டில் தக்க வைத்தவர் கவிஞர் தாராபாரதியே! இலக்கியவீதி என் தந்தைக்காக நடத்திய இரங்கலில், 'உன் மரணம், ஒரு மகத்தான கலையின் மரணம்' என இதயம் வெதும்பினார் தாராபாரதி. அந்த வரியால் விழிப்புற்ற நான், கவனகக் கலையில் ஈடுபட்டு வென்றேன்!'' என நன்றியோடு நெக்குருக...

கவிஞர் தாராபாரதியின் இறுதி யாத்திரை, ஒரு மகத்தான தலைவரின் இறுதி யாத்திரை போல் மலைப்பூட்டியது!

உறவினர்க்கு மட்டுமல்ல; உள்ளன்பு நிறைந்த, கவிதை உணர்வுள்ள, தமிழுணர்வுள்ள யாவர்க்குமே தாராபாரதியின் இழப்பு நிறைவு செய்ய முடியாத பேரிழப்புத்தான்.

இவரால் மேன்மையுற்ற மாணவர்களைப்போல், இவரால் செம்மையுற்ற கவிஞர்கள் எத்துணை பேர்!

இவருடைய ஒப்பற்ற உரைநடை, கவிதையுடன் போட்டி போடும்!

இந்த நூல் - அதற்கு அழுத்தமாகச் சான்று சொல்லும்.

'இது எங்கள் கிழக்கு' என்று பூபாளம் பாடி -

'உன் எடைக்கு முன்னே உமி எடைதான் இமயமலை; உன் உயரம் தெரியாமல் உணர்வின்றிக் கிடக்காதே!' என இளைஞர்களுக்கு உணர்த்தி -

'முதுகில் சுமக்கும் தானிய மணிகள் வயிற்றுப் பக்கம் வருவதே இல்லையே!' என்று தொழிலாளிகளுக்காக வருத்தப்பட்டு -

'தாமதமின்றிப் புரட்சியை முழக்கு; தடைகள் யாவும் தகர்ந்துவிடும்!' என வழி சொல்லி -

'விழிவிழி, உன் விழி நெருப்பு விழி - உன் விழிமுன் சூரியன் சின்னப் பொறி!' என இளைய தலைமுறைக்கு அறைகூவல் விடுத்து -

'புதுமைகள் செய்த தேசமிது... பூமியின் கிழக்கு வாசலிது!' என்பதை வலியுறுத்திய கவிஞர் உடல் இன்று இல்லாமல் இருக்கலாம்.

ஆனால், இவர் கவிதைகள் இருக்கும்; அந்தக் கவிதைகளில் இவர் என்றென்றும் இருப்பார்!

கவிதைகளைப் போலவே, இவருடைய உரைகளும் உலா வரும்!

அவற்றில் இவர் அணுக்கமாக உயிர்த்திருந்து நெறிப்படுத்துவார்!

இவர் வீழ்ச்சி-

நீர்வீழ்ச்சி என ஆறுதல் கொள்ள முயலலாம்...

இவருடைய கவிதைச் சிந்தனைகளும், உரை வீச்சுகளும் -

ஒரு நதி நடப்பது போல எப்போதும் இந்த நாட்டில் நடந்து கொண்டிருக்கும்!

அவை -

மொழி வளர்ச்சிக்கும், சமுதாய மேம்பாட்டிற்கும், தேசிய ஒருமைப்பாட்டிற்கும், உலக சமாதானத்திற்கும் உறுதுணை செய்யும்!

இது உறுதி!

நம்பிக்கையுடன்

இனியவன்

இலக்கியவீதி இனியவன்



விநாயகநல்லூர்
வேடன்தாங்கல் - 603 314

# மண் பயனுற வேண்டும்

☐ ஓவியக்கவிஞர் **மலர்மகன்**

கவிஞாயிறு தாராபாரதி என் உடன்பிறந்தவர்; என் இளவல். சிறந்த கவிஞர்; நல்லாசிரியர்.

இவரைப் பொறுத்தவரை -

'ஆசிரியர்' - முதல் நிலை;

'கவிஞர்' - அடுத்த நிலை.

'ஆசிரியப் பணி அறப்பணி - அதற்கே உன்னை அர்ப்பணி' என்று தன்னை ஒப்புக் கொடுத்தவர்.

தன் 34 ஆண்டு கால ஆசிரியர் பணியில் முத்திரை பதித்த இவர், பணியாற்றியது மூன்று பள்ளிகள்.

அச்சிறுப்பாக்கம் ஒன்றியம் சித்திரக்கூடம்.
காட்டாங்குளத்தூர் ஒன்றியம் பரனூர்.
மற்றும் காமராசபுரம் - கூடுவாஞ்சேரி.

தான் பணிபுரிந்த இந்த மூன்று பள்ளிகளையுமே 'முன்மாதிரிப் பள்ளிகளாக' உயர்த்திக் காட்டியவர், தாராபாரதி.

பள்ளிக்கூடங்களைக் கல்விக் கூடங்களாக மட்டுமல்லாமல் - மாணவர்களின் பன்முகத் திறன்களையும் நன்முறையில் வளர்க்கும் கலைக் கூடங்களாகவும் பரிணாமம் அடையச் செய்தார்.

தாழ்த்தப்பட்ட மாணவர்கள் மீது தனிக்கவனம் செலுத்தி, அவர்களை, பாராட்டுக்குரிய வாரிசுகளாக வளர்த்தார்!

அவர்களின் உயர்வுக்காக, அயர்வின்றிப் பாடுபட்டார்!

ஊனமுற்ற மாணவர்களுக்காக உருகிக் கரைந்தவர், அதற்காகவே மைசூரில் சிறப்புப் பயிற்சி பெற்று - கல்விக் கரம் கொடுத்து ஞானக் கரையேற்றினார்.

தன்மதிப்புப் பணியால் கல்வி அதிகாரிகளின் நன்மதிப்பைப் பெற்றுத் திகழ்ந்தார். கல்வித் துறையின், புதிய பாடத்திட்ட உயர்மட்டக் குழுவில் அங்கம் வகித்த இவர் -

கவிச் சிந்தனைகளைவிடக் கல்விச் சிந்தனைகளையே அதிகம் கருதிய இவர் -

வானொலி, தொலைக்காட்சி, பத்திரிகை ஊடகங்களிலும் கல்வி நிகழ்ச்சிகளை நிறைய வழங்கினார்.

'காண்போம் கற்போம், வாழ்க்கைக் கல்வி, எல்லாருக்கும் கல்வி, சான்றோர் சிந்தனை' போன்ற கல்வி ஒலிபரப்புகளில் - ஒளிபரப்புகளில் தன் எண்ணங்களைப் பதித்தவர்; பகிர்ந்தவர்.

பாரதியை குருவாகக் கொண்ட தாராபாரதி -

பாரதியார் போலவே -

மொழிப் பற்று, தொழில் பக்தி, மனித நேயம் நிறைந்தவர்.

கவிதையும், வசனமும் கவிஞரின் இருவிழிகள்.

தாராபாரதி, கவிவீச்சு போலவே உரை வீச்சிலும் வல்லவர்.

தனிநடை-

இவரது உரை நடை.

துருத்தாத சொற்கள், உறுத்தாத கருத்துகள், வருத்தாத வாக்கியங்கள் - இவர் பாணி.

'உண்மை' இவரது பேனா வன்மை.

ஆம்; இவருடைய பேனா (எழுத்து) வன்மையைப் பிரதி எடுப்பது நா(பேச்சு)வன்மை.

அவையடக்கத்தோடு ஆரம்பிக்கும் இவரது சுவைப் பேச்சுக்கு, அவை அடக்கம்.

இவ்வாறு பல சந்தர்ப்பங்களில் உரையாகவும், உரைநடையாகவும் வெளியான இவரின் பேச்சும் எழுத்தும் தொகுக்கப்பட்டு - முதல் முறையாக உரைநடை நூலாக வெளிவருகிறது.

இதில், சமுதாயம் சார்ந்த பொதுக் கருத்துகளும் கவலைகளும் இடம் பெற்றுள்ளன; குறிப்பாக, மாணவர்கள் - இளைஞர்களுக்கான ஊக்கச் சிந்தனைகள் உலா வருகின்றன.

'மண் பயனுற வேண்டும்...'

இ -1 எஸ்.பி.எஸ். சில்வர் ஸ்ட்ரீக்
97 - மேடவாக்கம் நெடுஞ்சாலை
(ஹோலி ஃபேமிலி கான்வெண்ட் அருகில்)
கீழ்க்கட்டளை
சென்னை - 600 091

அன்புடன்,

தொகுப்பாசிரியர்

## கவிஞாயிறு தாராபாரதியின்

## கல்வி மேம்பாட்டுக்

## கனவுகள் - கருத்துகள்

- வெற்றியின் மூலதனம்
- அறிவின் கருப்பை
- விஞ்ஞான ரேகை
- புதிய உலகின் தாள் திறக்கும்
- உடலினை உறுதி செய்
- மெல்லினம் - மேலினம்
- அமுதசுரபி
- மரணத்தரகர்கள்
- கல்வியில் பெரியவன்
- விரல்நுனி வெளிச்சங்கள்

**1**

# வெற்றியின் மூலதனம்

கல்வி -

உலக மக்கள் அனைவருக்கும் பொதுச் சொத்து.

ஒவ்வொரு மனித மூளைக்கும் ஊட்டச்சத்து.

மனிதனின் ஆறாவது அறிவுக்கு வேராக இருப்பது கல்வி.

அது, சுய சிந்தனையோடு கற்கவும், சொந்தக் காலில் நிற்கவும் துணை செய்வது.

*கல்வி-*
*மனித இனத்திற்குக் கிடைத்த பொது வரம்;*
*மனித வள மேம்பாட்டிற்கு அடியுரம்!*

ஆம்... கல்வி, மனிதனின் சிந்தனையைச் செப்பம் செய்கிறது.

செயல் திறனைச் சீர்மைப்படுத்தி, உழைப்பாற்றலை உறுதிப்படுத்துகிறது.

சமூக உறவைச் செழுமைப்படுத்தி, மனிதனின் ஆளுமையை முழுமைப்படுத்துகிறது!

*'கல்வி என்பது*
*வெறும் தகவல் திரட்டு அல்ல;*
*அது, மனிதனை உருவாக்குவது!'*

என்பார் விவேகானந்தர்.

தன் குடும்பத்தின் வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்த -

தன்னைச் சுற்றியுள்ள சமுதாய மேன்மைக்குத் தொண்டாற்ற-

தான் பிறந்த நாட்டின் முன்னேற்றத்திற்குச் சேவை புரிய -

மனித நேயம் மிக்க உலகக் குடிமகனாக உயர-

நெறிப்படுத்துவது கல்வி.

அத்தகைய கல்வி -

திணிக்கும் கல்வியாக இல்லாமல், இனிக்கும் கல்வியாக இருக்க வேண்டும்.

*கல்வி -*
*நாகரிகத்திற்கு நதி மூலம் - நம்*
*நடத்தைகளுக்கு விதைமூலம்!*

மாறிவரும் காலச் சூழலுக்கேற்ப, நடப்புலக நாகரிக வளர்ச்சிக்கேற்ப, நம் நடத்தைக் கோலங்களைப் பண்படுத்துவது கல்விதான்.

கல்வி-

அறிவு பெறும் சாளரம்.

ஆற்றலுக்குச் சாதனம்.

பண்பாட்டுப் பலகணி.

பன்னாட்டுப் பாலம்.

*'கல்வி என்பது பொதுவுடைமை*
*கற்றல் நமது பிறப்புரிமை!'*

## பழமுதிர் சோலை

'பள்ளி' என்பது கல்விக்கூடம் மட்டுமல்ல...

அது ஒரு கலைக்கூடம்.

பள்ளி, கல்விக்கு நாயகம். அது, கலைகளின் தாயகம்.

*'பள்ளி என்பது திருக்கோயில்*
*பகுத்தறிவுக்கது துணைவாயில்!'*

'கல் விக்கிரகங்களாக' வரும் மாணவர்களை -

'கல்விக் கிரகங்களாக' மாற்றும் 'கல்விக்கிரகம்' - பள்ளி.

*'பாடசாலை என்பது சிறைச்சாலை அல்ல;*
*பாடசாலை என்பது பழமுதிர்ச்சோலை.*
*கல்வி எனும் ஞானப்பழம் உதிரும் சோலை!'*

என்று மாணவர்கள் மகிழ்வாக எண்ணும்படி ஒரு பள்ளி அமைய வேண்டும்.

பள்ளி -

வெறும் பயிலகம் அல்ல.

அது -

கல்வி, கலை, பண்பாட்டுச் செயலகம்.

ஒழுக்கம் இங்கே பயிராகும்; ஒருமைப்பாடு உருவாகும்!

ஒழுக்கம், கட்டுப்பாடு, ஒருமைப்பாடு, பண்பாடு இவற்றை நெறிப்படுத்தி -

மாணவரை நேர்ப்படுத்தும் பாடசாலைகள், அறிவுச் சாலைகள் மட்டுமல்ல; அவை அறச்சாலைகள்.

பாடசாலை, மாணவர்க்குப் பூஞ்சோலை; பயிற்றும் ஆசிரியர்க்கு யாகசாலை.

ஆம்... பள்ளி ஒரு பாசமுள்ள குடும்பம்.

பல்வேறுபட்டவர்களையும் பாகுபாடு இல்லாமல் சரிசமமாக நடத்தும் பண்புள்ள குடும்பமாக அது திகழ வேண்டும்.

சாதிப்பாகுபாடுகளால் சரிந்துவிடாமல் -

மத மாறுபாடுகளால் சிதைந்துவிடாமல் -

மொழி எல்லைகளுக்கு அப்பாற்பட்டு -

அன்பின்பாற்பட்டு -

'ஒரே மனித இனம்... உலகம் ஒரு வீடு' என்னும் உணர்வுகள் உந்தப்பட்டு -

கூடி வாழும் குடும்ப மையம், பள்ளி ஆகும்!

பள்ளி என்பது வெறும் 'அறிவு மையம்' மட்டுமல்ல...

பெற்றோர் - பொது மக்களுடன் தொடர்பு கொண்ட உறவு மையம்!

அது...

'வீட்டுறவாக இணையும் கூட்டுறவு' என்கிற நினைப்பு எல்லாருக்கும் வரவேண்டும்.

***பள்ளிக் கூடம் என்பது,***<br>
***மாணவர் உள்ளம் மலரும் இடம்;***<br>
***மனித நேயம் வளரும் இடம்!***

## இரண்டாம் அன்னையர்

போர்வீரர்கள், நாடுகளை வெற்றி கொள்கிறார்கள்.

ஆனால், ஆசிரியர்களே நாடுகளை உருவாக்குகிறார்கள்!

உண்மை...

ஆசிரியர்கள், மாணவர்களுக்கு வழிகாட்டும் முன்னோடிகள்.

மாணவர்கள் தங்கள் முகம் பார்த்துக் கொள்ளும் கண்ணாடிகள்.

'ஓர் ஆசிரியர் ஆயிரம் போதகர்க்குச் சமம்!' ( A teacher is worth thousand priests) என்பார்கள்.

இவ்வளவு மதிப்பீடுள்ள ஆசிரியப்பணியை, அறப்பணி எனலாம்!

ஆசிரியப் பணி என்பது ஒரு வேலையல்ல; அது ஒரு வேள்வி!

ஆசிரியர், மாணவர் இருவரின் கேள்விகளால் நிகழும் கல்வி வேள்வி.

அதில் வரும் அவிர்பாகமே, அறிவமுதம்!

ஆசிரியர்கள், இனிய பண்பினர்; இரண்டாம் அன்னையர்!

கற்க வரும் குழந்தைகளுக்கு, ஆசிரியர்கள் கற்பகத் தருக்கள்!

ஆசிரியர்கள்,'மாணவர்களுக்கு எண்ணறிவும் எழுத்தறிவும் போதும்' என்று ஏட்டறிவை மட்டும் வளர்த்துவிட்டால் போதாது; நூலறிவோடு நுண்ணறிவையும் வளர்க்க வேண்டும்.

பின்னாளில், அவன், 'இன்னாரின் மாணவன்' என்று இனங்காணப்பட வேண்டும். (A tree is known by its fruits.)

2.

ஆசிரியர் அருமை, மாணவர் பெருமை!

வகுப்பறை என்பது -

பாட போதனைப் பயிற்சிப் பட்டறை மட்டுமன்று.

அது, பரந்த உலக அனுபவங்களின் பட்டறிவுப் பட்டறையாகவும் விளங்க வேண்டும்.

மாணவன், தன்னறிவைக் கொண்டு வாழ்க்கையில் தன்னிறைவு பெறச் செய்யவேண்டும்.

அதற்கு, தன்னம்பிக்கை எனும் நன்னம்பிக்கை முனையை ஆசிரியர்கள் காட்ட வேண்டும்.

ஆசிரியர்கள், மாணவர்களைக் குட்டிக் கெடுக்காமல் பாராட்டித் தட்டிக் கொடுத்துத் தக்கவழி கூறவேண்டும்.

செய் - தவற்றையே சுட்டாமல், செய்தவற்றைப் பாராட்ட வேண்டும்.

மெய்வழிகள் காட்டி மேன்மையுறச் செய்ய வேண்டும்.

ஒழுக்கம், கட்டுப்பாட்டை வலியுறுத்தி -

ஒருமைப்பாட்டை, பண்பாட்டை நிலைநிறுத்தி -

மாணவர்களை நன்னெறி நடக்கும் நற்குடி மக்களாய் உருவாக்குவது முன்னறி தெய்வமான ஆசிரியரின் பொறுப்பு.

***‘ஆசிரியப் பணி அறப்பணி***
***அதற்கு உன்னை அர்ப்பணி’***

## பிறை நிலாக்கள்

மாணவன் -

சிறப்பு மிக்கவன்; மாண்புகள் நிறைந்தவன்.

கல்வியறிவு பெற்ற மாணவன், ஒரு நாட்டின் கருவூலம் மட்டுமல்ல; அவன், நாளைய சமுதாய விளைச்சலுக்கு விதை மூலம்.

விஞ்ஞான நீர்ப்பாய்ச்சும் நதி மூலம்!

மாணவர்கள் பிள்ளை நிலாக்கள்; பள்ளி வாசல் தேடி வரும் பிறை நிலாக்கள்!

இவர்கள் முழுநிலாக்களாக முகம் காட்டுவது கல்விக் கூடம்!

***பாமா எழுதும் பாப்பாப் பாட்டில் பாரதி கூட***
***தெரியலாம்;***
***ராபின் வரையும் கிறுக்கல்களிலே ரவிவர்மா கூட***
***வரலாம்;***
***சுஷ்மா பாடும் சுந்தரக் குரலில் சுப்புலட்சுமியைக்***
***கேட்கலாம்;***

***அகமது ஆடும் விளையாட்டுகளில் அமிர்தராஜைக்***
***காணலாம்!***

பள்ளிகள் அறிவாலயங்கள்; ஆசிரியர்கள் அறிவாயுதங்கள்!

மாணவர்கள் அமைதிப் படை; புதியதோர் உலகு செய்யும் புரட்சிப் படை!

மாணவர்கள்-

சிறகை விரிக்கும் தேன் சிட்டுகள்; செந்தேன் சிந்தும் பூமொட்டுகள்.

இதமாகக் கல்வியமுது ஊட்டுவதால், ஆசிரியர், இரண்டாம் அன்னை.

பதமாக நடக்க, நன்னடை நல்குவதால், ஆசிரியர் இன்னொரு தந்தை.

ஆம்...

ஆசிரியர் - 'அம்மையப்பன்!'

எனவே-

மாணவர்கள், 'எனக்கு ஒருநாள் கற்பித்தவர் என் வாழ்நாள் முழுக்கத் தந்தையாகிறார்; தாயாகவும் விளங்குகிறார்!' என்று கருதி ஆசிரியர்களைப் போற்ற வேண்டும்.

மாணவர்கள், மானிட விழுதுகள்... அந்த விழுதுகள் பழுதாகிவிடக் கூடாது.

அவர்கள் பொழுது, அழுது போகக் கூடாது.

அதற்கு -

மாணவர்கள் - படிப்பாளிகளாக மட்டுமின்றி, சிறந்த படைப்பாளி களாகவும் 'புதியன கண்டு - பிடிப்பாளர்களாகவும்' வரவேண்டும்.

மாணவர்கள், நிகழ்கால உலகுக்கு நெம்புகோல்கள்! வளரும் தேசத்தின் வருங்கால வைப்பு நிதி! மலரும் பல துறையில் மாணவர்கள் வளர்பிறைகள்!

சுய சிந்தனையோடு சொந்தக்காலில் நிற்க வேண்டும் ; அதற்கு வேண்டியதைக் கற்க வேண்டும்!

மாணவச் செல்வமே-

*'நன்று கருது;*
*நாளெலாம் வினை செய்;*
*நினைப்பது முடியும்!'*

2

# அறிவின் கருப்பை

'உலகமே உறங்கிக் கொண்டிருக்கும்போது, ஒரு புதிய நாடு விழித்தெழுகிறது!'

இது -

நமது தாயகம் பாரதநாடு விடுதலை பெற்ற நாளில், நாயகன் நேரு கூறிய வாசகம்.

''விழிப்பு' என்பது, ஒரு சுதந்திர விடியலில் கண்விழித்தல் மட்டுமன்று; விழிப்புணர்ச்சியோடு நாட்டின் ஒவ்வொரு துறையையும் மேம்படுத்தல்!''

இதற்கு அடிப்படையானது, கல்வி.

### அறிவுக்கு வேர்

'கல்வி' என்பது சமுதாய மாற்றத்திற்கான சாதனம்; தேசிய முயற்சிகளுக்கும், வளர்ச்சிகளுக்கும் மூலாதாரம்.

மனிதனின் ஆறாவது அறிவுக்கு வேராக இருப்பது கல்வி.

'அறிவு, அற்றம்காக்கும் கருவி' என்று வள்ளுவர் அறிவுறுத்துகிறார்.

மனித குலத்திற்குக் கேடு வராமல் காக்கும் கேடயம் கல்வி.

இது, அறிவுக்கு ஊற்றுக்கண்.

கல்வி -

மனித ஆற்றல் மேம்பாட்டிற்கு அச்சாணி.

**மனித வளம்**

ஒவ்வொரு நாட்டிலும் வளங்கள் பல உள்ளன.

நீர்வளம், நிலவளம், கனிவளம், வனவளம், கடல்வளம் என்று இயற்கை வளங்கள் ஏராளம்.

இந்த இயற்கை வளங்களை, முன்னேற்றத்திற்கான மூலப் பொருள்களாக்கி-

நாட்டின் தொழில் வளத்தையும், பொருள் வளத்தையும் உயர்த்துகிற சக்தியே மனித வளம்.

அறிவு, ஆற்றல், உழைப்பு, குடிமைப்பண்பு ஆகிய நான்கும் மனித வளத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள்.

கல்விதான் இந்தத் தூண்களுக்கு அடித்தளம்.

கல்விதான் மனித வளத்தின் கருப்பை.

**சான்றோர் வாக்கு**

கல்வியின் மேன்மை பற்றிய சிந்தனைகளை நம் நாட்டுத் தலைமக்களும், அறிஞர் பெருமக்களும் வலியுறுத்தியுள்ளனர்.

'சான்றோனாக்குதல் தந்தைக்குக் கடனே' என்பதை, பெற்ற தந்தைக்குரிய கடமையாக மட்டுமின்றி - பொது வாழ்வில் ஈடுபட்ட நம் தேசியத் தந்தைகளும் தம் கடமையாய்க் கருதினர்!

'ஒரு குழந்தையின் உடல், உள்ளம், ஆன்மா இவற்றின் ஒட்டுமொத்தமான வளர்ச்சிக்கு வித்தாக இருப்பது கல்வி' என்று வரையறுத்தார் தேசத் தந்தை காந்தியடிகள்.

'கல்வி என்பது மூளையில் திணிக்கப்படும் செய்திகளின் தொகுப்பன்று. நமக்குத் தேவையான வாழ்க்கையை உருவாக்குவது: மனிதனை மனிதனாக்குவது; நன்னடத்தையை விளைவிப்பது!' என்று வகுத்துரைத்தார் ஞானத் தந்தை விவேகானந்தர்.

'புதிய மக்களாட்சித் தத்துவத்திற்கு ஏற்ற சிறந்த குடிமக்களை உருவாக்குவதே உண்மையான கல்வி!' என்று தெளிவுபடுத்தியவர் தத்துவத் தந்தை டாக்டர் இராதாகிருஷ்ணன்.

'தாய்மொழி வழிக் கல்வியே உயர்ந்தது' என்று வலியுறுத்தியவர் கல்வித் தந்தை குருதேவ் இரவீந்திர நாத் தாகூர்.

'மூட நம்பிக்கை - அறியாமைத் தளையிலிருந்து விடுவித்து, சமுதாய மாற்றத்திற்கு கல்வி ஒரு மாபெரும் கருவியாய் அமைய வேண்டும்' என்று அறிவுறுத்தியவர் பகுத்தறிவுத் தந்தை பெரியார்.

இவையெல்லாம், பொன்மொழிகளின் தொகுப்பாக இங்கே பட்டியல் இடப்படவில்லை.

இந்தியாவின் கல்வி முன்னேற்றத்திற்கான இந்தச் சிந்தனைகளை நினைத்துப் பார்க்க வேண்டிய நேரம் இது.

மேலை நாட்டுக் கல்வியாளர்கள் ஃப்ரோபெல், ஹெர்பார்ட், பெஸ்டலாஸி, ரூஸோ, ஜான் டூயி, மாண்டிசோரி முதலானோர் கருத்துகளையும் இணைத்துப் பார்க்கவேண்டிய கால கட்டம் இது.

### அறக்கட்டளைகள்

அரசியல் சட்ட மேதை அம்பேத்கர் மூன்று கட்டளைகளை முழங்கினார்.

முதற் கட்டளை: 'கற்பி' என்பதாகும்!

ரஷ்யப் புரட்சியின் போது, லெனின் மூன்று கட்டளைகள் பிறப்பித்தார்.

முதற் கட்டளை 'படியுங்கள்' என்பதாகும்!

இவர்களுக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே -

திருவள்ளுவர், முப்பாலில் கட்டளையிட்டார்: 'கற்க, கசடற; நிற்க அதற்குத்தக!'

இவை அரச கட்டளைகள் அல்ல; அறக்கட்டளைகள்.

கற்றுயர்ந்த அறிஞர்கள் முன் மொழிந்த 'கல்விக் கட்டளைகள்!'

**இடைவெளி**

இடைக்காலத்தில், கல்வி ஓரளவு பரவலாக்கப்பட்டது.

கல்வி நிலையங்கள், 'கடிகைகள்' என்று அழைக்கப் பெற்றன.

கோயில் மண்டபங்கள், மடங்கள், சத்திரங்கள், ஊர்ப் பொது மன்றங்கள் கல்விக் கூடங்களாயின!

வேத சாத்திரங்கள், புராணங்கள், இலக்கியங்கள், இலக்கணங்கள் மட்டுமல்லாமல்-

கணிதம், மருத்துவம், சோதிடம், வானசாத்திரம், தத்துவம், தொழில் நுட்பம் முதலானவை பாடங்களாயின.

போர்க்கலையில் நால்வகைப் படைப் பயிற்சிகள், தற்காப்புக் கலைகள் பயிற்றுவிக்கப்பட்டன.

இசை, ஓவியம், சிற்பம், நாட்டியம் போன்ற நுண்கலைகளுக்குத் தனித்தனிப் பள்ளிகள் இயங்கின.

இந்தக் கல்வி முறையிலும்கூட, சமுதாய அமைப்பில் பின்தங்கிய பிரிவினர்க்குக் கல்வி வாய்ப்புகள் தரப்படவில்லை!

எல்லாருக்கும் கல்வி என்கிற நிலைமை காணப்படவில்லை!

## பழம்பெருமை

இதில், குறிப்பிடத்தக்க பெருமை என்னவென்றால் -

இந்திய நாடு கல்வி நிலையில் உலகத்தின் கவனத்தை ஈர்த்து முன்னோடியாக விளங்கியது!

வடக்கே நாலந்தா, தட்சசீலப் பல்கலைக் கழகங்கள்!

தெற்கே காஞ்சி, எண்ணாயிரம் பல்கலைக் கழகங்கள்!

அயல்நாட்டு மாணவர்கள் ஆயிரக்கணக்கில் இங்கு வந்து தங்கிப் படித்ததை அறியும்போது , உயர் கல்வியில் நமது நாடு உச்சத்தில் இருந்ததை - உலகத்தின் கூரையாக மிளிர்ந்ததை எண்ணிப் பெருமிதம் கொள்கிறோம்.

அடுத்தடுத்து நிகழ்ந்த அன்னியப் படையெடுப்புகளாலும், அயலவர் ஆதிக்கங்களாலும் ஏற்பட்ட பின்னடைவு மிகப் பெரிய சேதம்; ஈடுகட்ட முடியாத சோகம்.

## அடிமை நிலை

ஆங்கிலேயர் காலத்தில் நடைமுறைக்கு வந்த 'மெக்காலே கல்விமுறை', ஆட்சியாளர்களின் நிர்வாகத்திற்கு எழுத்தர்களை உற்பத்தி செய்யும் 'குமாஸ்தா கல்வி முறை'யாயிற்று.

தனியார் அறக்கட்டளைகளும், மத நிறுவனங்களும் பள்ளிகளைத் தொடங்கின.

எனினும், கிராமந்தோறும் பள்ளிகள் நிறுவப்படவில்லை.

எனவே, சிற்றூர்களில் திண்ணைப்பள்ளிகள் உருவாயின.

நிலச்சுவான்தார்கள், பிற்படுத்தப்பட்ட - தாழ்த்தப்பட்ட பிரிவினரைப் பண்ணைக் கூலிகளாகவும், கொத்தடிமைகளாகவும் நடத்திக் கல்வி வாய்ப்புப் பெற விடாமல் முடக்கி வைத்திருந்தார்கள்.

கொத்தடிமை, தீண்டாமைக் கொடுமைகளால் சமுதாயத்தின் பெரும்பகுதி மக்கள் புறக்கணிக்கப்பட்டார்கள்.

கல்வி என்பது -

மேன்மக்கள் (CLASSES) மட்டுமே பெறுவதற்கு உரியதாகவும், பொதுமக்கள் (MASSES) பெற முடியாததாகவும் இருந்தது!

இந்தியர்களே, இந்தியர்கள் கல்வி பயில்வதற்குத் தடையாக இருந்ததால் எல்லாருக்கும் கல்வி கிட்டவில்லை!

சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட தேசிய இயக்கம், 'எல்லாருக்கும் கல்வி' என்கிற முழக்கத்தை முன்மொழிந்தது.

மகாத்மா காந்தி, 'வார்தா கல்வித்திட்டம்' தொடங்கி, ஆதாரக் கல்வி முறை மூலமாக நிர்மாணத் திட்டங்களை இணைத்து அறிமுகப்படுத்தினார்.

என்றாலும் கூட ஆங்கிலத் துரைத்தனங்களாலும், அவர்களுக்கு அடியாட்களாயிருந்த சில இந்தியரின் நரித்தனங்களாலும்-

கடைநிலை இந்தியன் தொடக்கக்கல்வியைத் தொடமுடியாதவனாக - எழுத்தறிவை எட்டமுடியாதவனாக இருந்த அவலநிலை தொடர்ந்தது!

**அறிக்கைக் கல்வி**

இந்திய விடுதலைக்குப்பிறகு , கல்வித்துறையின் வளர்ச்சிக்குப் பெரும் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன.

கல்விச் சீர்திருத்தங்களை நடைமுறைப்படுத்த, பல்வேறு கால கட்டங்களில் டாக்டர் எஸ். இராதாகிருஷ்ணன் கல்விக்குழு, டாக்டர் ஏ.இலட்சுமணசாமி முதலியார் கல்விக்குழு, கோத்தாரி கல்விக்குழு எனப் பல குழுக்கள் அமைக்கப்பட்டன.

அவற்றின் பரிந்துரைகள், நம் நாட்டுக் கல்வி முறையை மேம்படுத்தப் பெரிதும் உதவியுள்ளன.

### ஆமை வேகம்

1951 ஆம் ஆண்டு நமது நாட்டில் கல்வியறிவு பெற்றவர்களின் எண்ணிக்கை நூற்றுக்குப் பதினேழு பேர் மட்டுமே.

1951 இல் இந்திய அரசியல் சட்டம் 45ஆவது பிரிவு, 'அடுத்த பத்தாண்டுக்குள் அனைவருக்கும் தொடக்கக் கல்வி அளிக்கப்பட வேண்டும்' என வலியுறுத்தியது.

ஆனால், 1961 இல் நிலைமை என்ன?

எழுத்தறிவு பெற்றவர்கள் தொகை, நூற்றுக்கு 24 விழுக்காடு மட்டுமே!

1968இல், புதிய கல்விக் கொள்கை காலவரையறை குறிப்பிடாமல், சீரமைப்புப் பணிகளை மேற்கொள்ள வழி வகுத்தது.

தொடர்ந்து, மெதுவான கல்வி வளர்ச்சி கவலை தருவதாகவே இருந்தது.

### *கி.பி.2000*

கல்வியே வளரும் நாட்டின் உயிர்நாடி என்பதைக் கருத்தில் கொண்டு, மைய அரசு 1986 இல் தேசியக் கல்விக் கொள்கையை முன் மொழிந்தது.

'கி.பி.2000 ஆம் ஆண்டுக்குள், அனைவருக்கும் தொடக்கக் கல்வி அளித்தாக வேண்டும்... 'எல்லாருக்கும் கல்வி' கிடைக்கச் செய்ய வேண்டும்!' என்கிற இலக்குடன் அறைகூவல் விடுத்தது.

#### *அச்சமாக...*

பள்ளிசார் கல்வி மற்றும் பள்ளிசாரா முழு எழுத்தறிவுத் திட்டம் பல முனைகளில் தீவிரமாக நாடுமுழுக்க முடுக்கிவிடப்பட்டது.

1991 கணக்கெடுப்பின்படி, இந்தியாவில், தேசிய அளவில் எழுத்தறிவு பெற்றவர்கள் எண்ணிக்கை 52%.

இவர்களில், பெண்கள் கல்வி நிலை நூற்றுக்கு முப்பத்தொன்பது விழுக்காடு.

விடுதலை பெற்று, நாற்பத்தெட்டு ஆண்டு காலத்தில் இன்னும் 48% மக்கள் எழுத்தறிவற்றவர்களாக இருக்கிறார்கள் என்பது நமது நாட்டை அச்சுறுத்துவதாக உள்ளது.

**அவர்கள் எப்படி?**

அண்டையில் உள்ள, மிகச்சிறிய நாடான இலங்கைத் தீவில் 97% மக்களும், தென் கொரியாவில் 99% மக்களும் கல்வியறிவு பெற்றிருக்கிறார்கள்!

நாம், இன்னும் சில ஆப்பிரிக்க நாடுகளை விடவும் பின் தங்கி இருக்கிறோம்!

இதற்கு, மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு காரணியாகச் சுட்டப்படுகிறது.

உலகிலேயே மிகவும் அதிகமான மக்கள் தொகை கொண்ட நாடு சீனா. நம் நாட்டைவிடப் பின் தங்கிய நிலையில் இருந்த தேசம். நமக்குப் பின்னால் விடுதலை பெற்றது. தற்போது (1996) சீனாவில் எழுத்தறிவு பெற்றவர் தொகை 85%!

மக்கள் தொகைப் பெருக்கம் அந்த நாட்டின் கல்வி வளர்ச்சிக்குத் தடையாக அமையவில்லை என்பது கண்கூடாகத் தெரிகிறது!

ரஷ்யப் புரட்சிக்குப் பிறகு, தலைவர் லெனின் ஆட்சிப் பொறுப்பேற்றபோது, நாட்டில் நூற்றுக்கு முப்பது பேர் மட்டுமே எழுத்தறிவு பெற்றிருந்தார்கள்.

1919 இல் கல்லாமை ஒழிப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது.

1939 இல் கல்வியறிவு பெற்றவர்கள் 87%.

நூற்றுக்கு முப்பது பேர் என்றிருந்த நிலை, இருபதே ஆண்டுகளில் எண்பத்தேழாக உயர்ந்தது.

இத்தனைக்கும் ரஷ்யா உலகிலேயே மிகப் பெரிய நாடு!

அங்கே, 122 மொழிகள் பேசப்படுகின்றன!

பல்வேறு கலாச்சார மக்கள்...பொருளாதார நெருக்கடி...

இத்தனையையும் மீறி, சாதனை நிகழ்த்தப் பட்டிருக்கிறது!

### சிந்திக்க வேண்டிய உண்மை

நம்முடைய நாடு, விடுதலை பெற்ற பொன்விழா ஆண்டை (1997) நெருங்கிக் கொண்டிருக்கும் தருணத்தில், நாற்பது கோடி மக்களுக்கு மேற்பட்டவர்கள் இன்னும் எழுதப்படிக்கத் தெரியாதவர்களாக இருக்கிறார்களே?!

### எச்சரிக்கை

'கல்வி வளர்ச்சிக்கு விரைவு நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படாவிட்டால், கி.பி.2000 ஆம் ஆண்டில், உலகம் முழுவதிலும் உள்ள படிக்காதவர்கள் தொகையில் பாதிக்குமேல் (54%) இந்தியர்களாக இருப்பார்கள்!' என்று ஐ.நா.சபையின் ஆய்வறிக்கை சுட்டிக் காட்டுகிறது.

இது அச்சுறுத்தல் அன்று; நமக்கு ஓர் அறிவுறுத்தல்.

### ஏன், எப்படி?

இது, எதனால் வந்த நிலை?

எங்கே, என்ன தடை?

கடந்த 2000 ஆண்டுகளில், இந்தியாவை, மண்ணின் மைந்தர்களாகிய இந்தியர்கள் ஆண்ட காலத்தைவிட, அன்னியர்கள் ஆண்ட காலமே அதிகம்!

அடுத்தடுத்து - பாரசீக,கிரேக்க, துருக்கியப் படையெடுப்புகள்...

விலை மதிப்பில்லாத நமது நாட்டுச் செல்வம் சுரண்டப்பட்டது; சூறையாடப்பட்டது.

வந்தவர்கள் போனவர்களால் வளங்கள் வஞ்சிக்கப்பட்டன.

மொகலாயர்கள்... அடுத்து ஆங்கிலேயர்கள்...

**சோதனைகள்**

முன்னூறு ஆண்டுகளுக்கும் மேலாக -

ஆங்கிலேயர்களால் அடக்கப்பட்டு, மனித உரிமைகள் மறுக்கப்பட்டு, முன்னேற்றங்கள் முடக்கப்பட்டு நீண்ட நெடுங்கால அடிமை வாழ்வு.

அடிமை இந்தியர்களுக்குள்ளேயே, ஆயிரம் ஏற்றத்தாழ்வு!

எந்த நாட்டிற்கும் வராத ஏராளமான சோதனைகள்!

**தடைகள்**

நூறாண்டு காலம் போராடி விடுதலை பெற்ற போது -

நமது நாட்டின் நிலைமை...

பொருளாதாரச் சீரழிவைப் புதுப்பிக்க வேண்டிய நெருக்கடி; துறைதோறும் சிதைவுகளைச் சரிக்கட்டித் தூக்கி நிறுத்த வேண்டிய சுமை.

ஏழ்மை...

பாதிக்கு மேற்பட்ட மக்கள் வறுமைக் கோட்டிற்குக் கீழே!

படிப்பறிவு பற்றிய விழிப்புணர்வு இல்லாத மக்கள்!

தீண்டாமை, பெண்ணடிமை, கொத்தடிமைக் கொடுமைகள்!

கல்வியறிவு பெற விரும்பிய கீழ்த்தட்டு மக்களுக்கு, மேல்தட்டு வர்க்கம் விதித்த தடைகள்!

இப்படி எத்தனை முடைகள்!

பெரும்சுமைகளையும், வரும் தடைகளையும் தாங்கிக் கொண்டு -

எப்படி இருக்கிறதென்றால், கிராமங்களில் உறியடித் திருவிழாவில் 'வழுக்குமரம்' ஏறுவதைப் போலிருக்கிறது!

### அரச கட்டளை

தொடக்கக் கல்வியை மேம்படுத்தல், முறைசாராக் கல்வியை நெறிப்படுத்தல், பாடத்திட்டத்தைச் சீரமைத்தல் குறைந்தபட்சக் கற்றல் இலக்குகளை நடைமுறைப்படுத்தல் -

தொழிற்கல்வியை விரிவுபடுத்தல் -

அறிவியல் தொழில்நுட்பக் கல்வியை வலுப்படுத்தல் -

கரும்பலகைத் திட்டத்தைச் செயல்படுத்தல்-

தாழ்த்தப்பட்டோர் - பழங்குடியினர் கல்வி; பெண்கள் கல்விக்கு முக்கியத்துவம் அளித்தல்...

ஊக்கத் தொகை வழங்குதல், பள்ளிகளின் தேவைகளை நிறைவு செய்தல் எனப் பலவேறு கோணங்களில் மைய அரசு விரைவுபடுத்தி வருகிறது.

### விழிப்புணர்வு

கல்வி வளர்ச்சி என்பது ஒரு கூட்டு முயற்சி.

அரசு மற்றும் கல்வித்துறை மட்டுமே செய்ய வேண்டிய பணி' என்று கருதி, பொது மக்கள் சமுதாயம் ஒதுங்கிக் கொள்ளக் கூடாது.

சமூகச் சீர்திருத்தவாதிகள், மக்களிடையே விழிப்புணர்வை ஊட்டுவது கல்வி மேம்பாட்டுக்கு வழிகோலும்.

### வரப்பிரசாதம்

'எல்லாருக்கும் கல்வி' என்பது உலகளாவிய சிந்தனையாக வலுப்பெற்று-

அந்த இலக்கை எட்டுவதற்கான திட்டங்கள் உருப்பெற்றுள்ளன.

அத்தகைய திட்டங்களில், 'மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம்' ஒரு வரப்பிரசாதம்.

பெண்கள் கல்வி நிலை, தேசிய சராசரி அளவை (39%) விடக் குறைந்துள்ள பகுதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளன.

இந்தியாவில், ஏழு மாநிலங்களில் 43 வருவாய் மாவட்டங்களில், மாவட்டத் தொடக்கக் கல்வித் திட்டம் அறிமுகப் படுத்தப்பட்டுள்ளன.

**புத்துயிர்**

1994-95 இல் தொடங்கப்பட இந்தத் திட்டம், அடுத்த ஏழாண்டுக்குள் தன்னிறைவு பெற்றாக வேண்டும் என்பது இலக்கு.

உலக வங்கியின் நிதியுதவியோடு செயல்படத் தொடங்கியுள்ள திட்டத்தின் அடிப்படை நோக்கங்கள்: 6 முதல் 14 வயதுக்குட்பட்ட குழந்தைகள் அனைவரையும் பள்ளிகளில் சேர்த்து - தரமான, இலவசக் கட்டாயக் கல்வி அளித்தல்; இடையில் படிப்பைத் துண்டித்துக் கொள்ளும் மாணவர்களும் குறைந்தபட்சக் கற்றல் திறன்களை எட்டுதல்; கல்வித்தரத்தை மேம்படுத்தல்.

இவை யாவும் -

பள்ளிக் கல்விக்குப் புத்துயிர் அளிப்பன.

கல்வியின் திறம் உணர்வோம்; வாழ்க்கைத் தரம் உயர்வோம்.

'கல்லாமை - இல்லாமை' ஆக்குவோம்!

புதியதோர் உலகு செய்வோம்!

3

# விஞ்ஞான ரேகை

தற்காலம் அறிவியலின் பொற்காலம்!

உலகெங்கும் தொழில் நுட்பத் துறையின் ஒளிக்கோலம்!

பொறியியல் துறையில் புதிய கண்டுபிடிப்புகள்!

தொழில்நுட்பத் துறையில் நவீன எந்திரங்கள்!

மருத்துவத் துறையில் மலைக்க வைக்கும் சாதனங்கள்!

வேளாண்துறையில் வியக்க வைக்கும் விஞ்ஞான உத்திகள்!

போக்குவரத்துத் துறையில் -

நிலவழி, நீர்வழி, வான்வழிகளில் அதிசயிக்க வைக்கும் அதிநவீன வாகனங்கள்!

இப்படி, துறைதோறும் புதிய புதிய மாற்றங்கள்!

மாயமா? மர்மமா?

3

எதுவுமில்லை!

மந்திரமா? தந்திரமா?

அதுவுமில்லை!

மனித மூளையின் மகத்தான கண்டுபிடிப்புகள்!

'தேவைதான் கண்டுபிடிப்புகளின் தாய்'

(Necessity is the mother of Invention)

அதன் விளைவு?

'நாளொரு சோதனை; பொழுதொரு சாதனை!'

கற்கால ஆதிமனிதன் வாழ்ந்ததை, ஒரு கணம் கண்மூடி நினைத்துப் பாருங்கள்.

தற்கால மனிதனின் வாழ்க்கையை ஒரு கணம் எண்ணிப் பாருங்கள்.

அடேயப்பா... என்ன பிரம்மாண்டமான வளர்ச்சி!

நவீன வசதிகள்... நடப்புலக முன்னேற்றங்கள்...

இந்த மாபெரும் வளர்ச்சி, பூமியின் சுழற்சியால் வந்ததல்ல; மனித முயற்சியால் ஏற்பட்ட மாற்றம்!

**முன்னோடிகள்**

ஒவ்வொரு கண்டுபிடிப்பும், முன்னோடிகளாயிருந்த விஞ்ஞானிகளின் மூளைக் கருவில் உருவாகி, முயற்சியில் தொட்டில் கட்டித் தோற்றம் பெற்றவை.

அறிவியல் மேதைகளின் சுய சிந்தனை, விடாமுயற்சி, கடின உழைப்பு, தோல்வி கண்டு துவளாமை - இவற்றை நாம் கருத்தில் இருத்திப் பார்க்க வேண்டும்.

வாழ்க்கைப் போராட்டத்தில் எத்தனையோ பிரச்சினைகளை எதிர்கொண்டாலும், சமுதாயத் தேரோட்டத்திற்கு அந்தச் சாதனையாளர்கள் வழங்கியவை ஏராளம்!

அறிவியல் சாதனங்களால் சமுதாயம் மேன்மையடைய வேண்டும் என்று -

தங்கள் மெய்வருத்தம் பாராமல், பசி நோக்காமல், கண் துஞ்சாமல், கருமம் சிதையாமல் -

வாழ்நாள் முழுதையும் அர்ப்பணித்த அறிவியல் மேதைகளின் வரலாற்றை நமது மாணவத் தலைமுறை ஆழ்ந்து படிக்க வேண்டும்.

**மூலம் எங்கே?**

விஞ்ஞானம் என்பது வெளியே இல்லை.

இயற்கையில் இருக்கிறது!

இந்த உலகம்-

'திறந்த வெளி விஞ்ஞானக் கூடம்!'

'நிலம், நீர், காற்று, நெருப்பு, வானம்' ஆகிய ஐம்பெரும் சக்திகளில் விஞ்ஞானம் பொதிந்திருக்கிறது; புதைந்திருக்கிறது; கலந்திருக்கிறது.

இந்த ஐம்பெரும் சக்திகளையும் நம் ஐம்புலன்களால் உணர்ந்து-

அறிந்து -

ஆறாவது புலனை விழிக்கச் செய்து, ஆராய்ச்சி உணர்வைப் பெருக்கிக் கொண்டு புதியவை படைக்க முனைய வேண்டும்.

கனாக்குறிகளில் காலத்தைக் கடத்தாமல் -

வினாக்குறிகளை எழுப்ப வேண்டும்.

ஏன்?

எதற்கு?

எப்படி?

இந்தக் கேள்விகள் மூலம், தேடல் தொடங்க வேண்டும்.

'எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு'

என்கிறார் திருவள்ளுவர்.

இளைஞர்கள் பொருளுணர்ந்து இதனைப் பின்பற்ற வேண்டும்.

**மூலவர்**

தாமஸ் ஆல்வா எடிசன்...

அனைவரும் அறிந்த பெயர்.

குடும்பத்தில் வறுமை...

பள்ளிக்குச் சென்றது மூன்றே மாதங்கள்...

படிப்பு ஏறவில்லை...

காது கேளாதவர்... சின்ன வயது... இரயில் நிலையத்தில் செய்தித்தாள் விற்றுப் பிழைப்பு நடத்தியவர்...

ஒருநாள் -

வீட்டில், சுவர் மூலையில், கோழி முட்டைகளின் மீது உட்கார்ந்திருந்தார்!

தந்தை பார்த்துவிட்டு, "என்ன செய்கிறாய்?" என அதட்டினார்.

எடிசன், "முட்டைகளை அடைகாக்கிறேன்!" என்றார்.

"முட்டாள்!..." என்று தந்தை ஓர் அறை விட்டார்.

'கோழியும் இப்படித்தானே செய்தது?... நான் ஏன் செய்யக் கூடாது?' - எடிசனின் சிந்தனை இப்படி ஓடியது.

முட்டை பொரிப்பதற்காக முட்டாள்தனமான செயலில் ஈடுபட்ட அந்த மந்த புத்திக்காரர்தான், அறிவியல் பறவையாகி - ஆயிரம் 'குஞ்சு' பொரித்தார்!

பிற்காலத்தில், அகில உலகம் வியக்கும் அளவுக்கு ஆயிரத்திற்கும் மேற்பட்ட கண்டுபிடிப்புகளை உருவாக்கினார்!

இன்று நாம் மின்சார ஒளி விளக்கில், மின் விசிறியில், கிராம ஃபோனில், திரைப்படத்தில் வசதிகளையும் சுகங்களையும் அனுபவிக்க அவர்தான் மூலவர்!

அவர் மறைந்தபோது, அமெரிக்கா முழுவதும், மின்விளக்குகளைச் சில நிமிடங்கள் அணைத்து - இருளில் அந்த மேதைக்கு அஞ்சலி செலுத்தினார்கள்!

அந்த இரண்டு மூன்று நிமிட இருட்டடிப்பின் போதுதான் எடிசனின் அருமை புரிந்தது!

**'பெல்' - கிரகாம்பெல்**

நம் வீட்டில் டெலிபோன் 'பெல்' அடிக்கிறது...

உடனே 'கிரகாம்பெல்' நினைவுக்கு வருகிறார்.

வாய்ஸ் ஆஃப் அமெரிக்கா கேட்கிற அம்பானி...

பி.பி.சி கேட்கிற பெஞ்சமின்-

சென்னை வானொலி கேட்கிற கிராமத்துச் செங்கேணி -

இவர்கள் மார்க்கோனியை மறந்துவிட முடியுமா?

வானொலி கேட்கிற போதெல்லாம், மார்க்கோனியின் உழைப்பு மறு ஒலிபரப்பாகிறது!

உலக நாடுகள் நம் வீட்டுக் கூடத்தில் மாநாடு போடுகின்றன, தொலைக்காட்சியில்!

தொலைக்காட்சியைக் காணுகிறபோது, ‘பெயர்டு’வின் செயலாற்றல் நம் நெஞ்சில் நிழலாடுகிறது.

மேடம் கியூரி - அறிவியல் துறையில் முன்னணியில் நின்ற பெண்மணி!

இரண்டு முறை நோபெல் பரிசு பெற்ற சாதனை -

நமக்கெல்லாம், நம் மகளிருக்கெல்லாம் வழிகாட்டும் சாதனை!

விஞ்ஞான சோதனைகளின் போது அறிஞர்கள் எதிர்கொண்ட இடையூறுகள், இடர்ப்பாடுகள் கொஞ்சமல்ல.

மேதை கலிலியோ, விஞ்ஞானத்தின் தந்தை.

உலகம் உருண்டை என்றார்.

பூமி சூரியனைச் சுற்றி வருகிறது என்ற உண்மையைக் கண்டுபிடித்தார்!

என்ன ஆயிற்று?

அதுவரை, ‘பூமி தட்டையானது’ என்றும், சூரியன்தான் பூமியைச் சுற்றி வருகிறது என்றும் நம்பிக் கொண்டிருந்த மதவாதிகள் கலிலியோவைப் பழித்தார்கள்; தூற்றித் தாக்கினார்கள்.

கலிலியோ 16 ஆண்டுகள் சிறை வைக்கப்பட்டார்!

மகத்தான விஞ்ஞான உண்மைகளை மதவாதம் மறுத்தது...

கலிலியோ பட்ட அவமானங்கள், தண்டனைகள் அவரை அயரவைக்கவில்லை!

தொடர்ந்து, தமது கருத்தை வலியுறுத்தி மறைந்தார்.

இன்றைய உலகம், அவரது கண்டுபிடிப்புகளை ஏற்றுக் கொண்டது.

ஏராளமான கண்டுபிடிப்புகள்!

விஞ்ஞானிகள் பற்றிச் சொல்லிக் கொண்டே போகலாம்...

## தமிழன் அறிவியல்

மிகப் பலர் போல், எனக்கும் ஐயம் இருந்தது...

'இந்தியருக்கு - தமிழருக்கு, பண்டைக்காலத்தில் அறிவியல் சிந்தனையே இருந்ததில்லையா?... அவர்கள் அறிவியல் சாதனங்கள் படைத்ததே இல்லையா?'

கேள்விகள், ஆதாரங்களைத் தேட வைத்தன.

தேடத் தேடப் புதையல் புதையலாக-

தமிழனின் அறிவியல் கண்ணோட்டம், பொறியியல், தொழில்நுட்பச் சிந்தனைகள், சாதனைகளுக்குச் சான்றுகள் கிடைத்தன!

எங்கிருந்து?

தமிழனின் இலக்கியப் பேழைகளிலிருந்து!

## ஞாலம்

முதலில், உலகத்திலிருந்தே தொடங்குவோம்!

உலகம் என்பதை 'ஞாலம்' என்ற சொல்லால் தமிழன் குறிப்பிட்டான்.

ஞாலம் என்பது 'ஞாலுதல்' - அதாவது தொங்குதல் என்கிற பொருள் தரும்.

இந்தப் பூமி, அண்ட வெளியில் எந்தவித ஆதாரமும் இன்றித் தொங்கிக் கொண்டிருப்பதை முதலில் அறிந்தவன் தமிழன்!

**நிற்பதுவே.... நடப்பதுவே...**

'தாவரங்களுக்கு உணர்வுண்டு.. உயிருண்டு' என்பதைக் கண்டறிந்து உலகுக்குச் சொன்னவர், ஜகதீச சந்திர போஸ்!

அவர் இந்தியர் என்பதில் நமக்குப் பெருமை.

"மனிதர்களும் மற்ற விலங்குகளும் நகரும் தாவரங்கள்; மரங்கள் நின்று வாழும் பிராணிகள் (Men and other animals are only moving plants; and trees are only stationary animals)" என்றார் போஸ், 18ஆம் நூற்றாண்டில்.

இவருக்கு 600 ஆண்டுகளுக்கு முன்பே, தாவரங்களுக்கு உயிருண்டு என்று கம்பர் கூறியுள்ளார்.

'சென்று வாழ் நின்று வாழ் உயிர்கள்' - இது அந்தக் கவிச் சக்கரவர்த்தியின் தொடர்.

**சென்று வாழ் உயிர்கள்** : ஊர்வன, நடப்பன, நீந்துவன, பறப்பன.

**நின்று வாழ் உயிர்கள்** : செடி, கொடி, மரங்கள்.

கம்பனுக்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே, தொல்காப்பியர் இதனைத் தெளிவு படுத்தியிருக்கிறார்!

***'ஒரறிவதுவே... உற்றறிவதுவே..***
***புல்லும் மரனும் ஒரறிவினவே!'***

ஆக -

தாவரங்களுக்கு உயிருண்டு - உணரும் அறிவுண்டு என்பது ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தமிழனால் கண்டறியப்பட்ட உண்மை!

## புல்லாகி... பூடாகி....

'பரிணாமக் கொள்கை' (Evolution Theory) என்பது டார்வின் தியரி.

அவர், உயிரினங்களின் தோற்றம் - பரிணாம வளர்ச்சி பற்றி 17ஆம் நூற்றாண்டில் தெரிவித்தார்.

ஆனால், அவருக்கு எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பே மாணிக்கவாசகர் ''புல்லாகிப் பூடாகிப் புழுவாகி....'' என்று மனித இனத்தின் பரிணாம வளர்ச்சியைக் கூறியிருக்கிறார் என்பது வியப்பான செய்தி!

## அணுக்கொள்கை

டால்டன் 18ஆம் நூற்றாண்டில் கண்டறிந்து சொன்னது:

'அணுவைப் பிரிக்க முடியாது - பிளக்க முடியாது!'

ஆனால் ஔவையார் சொல்கிறார்:

''அணுவைத் துளைத்து - ஏழ்கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறள்!''

'அணுவைத் துளைக்க முடியும்' என அறியதியிட்டுக் கூறியிருக்கிறார், ஔவையார்!

ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட கம்பர், அணுவினைச் சத கூறுகளாக (நூறு கூறுகளாக)ப் பிளப்பது பற்றிப் பாடியிருக்கிறார்!

அந்தச் சிறு கூறு - 'கோன்' என்று கம்பரால் குறிக்கப்படுகிறது.

மூவாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட திருமூலர், ''அணுவில் அணுவினை ஆயிரம் கூறிட்டு'' என்கிறார்.

தமிழனின் நீட்டலளவை வாய்பாட்டில், அணு இடம்பெறுகிறது!

| | |
|---|---|
| 8 அணு | 1 தேர்த்துகள் |
| 8 தேர்த்துகள் | 1 பஞ்சிழை |
| 8 பஞ்சிழை | 1 மயிர் |
| 8 மயிர் | 1 நுண் மணல் |
| 8 நுண்மணல் | 1 கடுகு |
| 8 கடுகு | 1 நெல் |
| 8 நெல் | 1 பெரு விரல் |
| 12 பெருவிரல் | 1 சாண் |
| 2 சாண் | 1 முழம் |

**ஊசல் கொள்கை**

கலிலியோ கண்டறிந்து கூறுவதற்குப் பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே, 'பிரபுலிங்க லீலை' என்னும் நூலில் 'ஊசல்தத்துவம்' கூறப்பட்டிருக்கிறது!

ஊசலின் நீளம் அதிகமானால் , வீச்சு - ஆடும் வேகம்- குறையும்; நீளம் குறைவாக இருந்தால், வீச்சு வேகம் அதிகமாகும்!

காவிய நாயகி ஓர் ஊஞ்சலில் அமர்ந்திருக்கிறாள்...

அவள் காதில் நீண்ட குழைகள்...மூக்கில் முத்துத் தொங்கல்..

தலைவி ஊஞ்சலாடும் போது - காதிலுள்ள குழையின் வீச்சு , மெதுவாகவும், முத்துத் தொங்கலின் வீச்சு வேகமாகவும் நிகழ்கிறதாம்.

இங்கே, ஊசலின் தத்துவம் வெளிப்படுகிறது!

## உலகம் உருண்டை

கோபர் நிக்கஸ் முன்மொழிய, கலிலியோ வழிமொழிந்த இந்த உண்மை - உலகம் உருண்டை வடிவம் என்பது - அவர்கள் கண்டறிந்து சொல்வதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பாகவே, திருவாசகம் தந்த மணிவாசகரால் கூறப்பட்டுள்ளது.

'அண்டைப் பகுதியின் உண்டைப் பிறக்கம்' என்கிறார் மணிவாசகர்.

## வான ஊர்திகள்

'ரைட்' சகோதரர்கள் வானவூர்தி கண்டுபிடிக்கும் முன்பாகவே 'வலவன் ஏவா வானவூர்தி'கள் இருந்ததாக - சிலம்பு, மணிமேகலை, சீவக சிந்தாமணி முதலிய நூல்கள் கூறுகின்றன.

தமிழனின் நீர்வழிக் கப்பல்கள் போக்குவரத்துப் பற்றி பிளினி, தாலமி போன்ற வரலாற்று ஆசிரியர்கள் பதிவு செய்துள்ளனர்.

## தெர்மாஸ் குடுவை

இது, தற்காலக் கண்டுபிடிப்பு.

ஆனால் சங்க காலத்தில் மூங்கில் குழாயைப் பயன்படுத்தி வெந்நீர் சூடு ஆறாதவாறு பாதுகாத்தனர்.

இது, 'சேமச் செப்பு' எனப்பட்டது.

மேலும் -

நீரூற்றுகள், நீர்க்கடிகாரங்கள், கண்ணாடிகள், கரும்பு அரைக்கும் எந்திரங்கள் போன்ற பல சாதனங்களையும் தமிழர்கள் பயன்படுத்தியுள்ளனர்.

## கட்டுமானம்

பொறியியல் - கட்டுமானப் பணிகளில், உலகின் புருவத்தை உயர்த்தச் செய்யும் தமிழனின் சாதனைகள் ஒன்றா இரண்டா !

கல்லணை, கோட்டைகள், கோட்டை மதில் எந்திரங்கள், தஞ்சைக் கோபுரம், மாமல்லபுரம் கடற்கரைக் கோயில் என்று ஒரு சுற்றுலாவே வரலாம்.

பண்டைய புலவர்கள் வரிசையில், அறிவியல் - தொழில் நுட்பச் சாதனைகளுக்கு யோசனைகள் கூறியவர் மகாகவி பாரதியார்.

அவர் விடுதலை வெளிச்சத்திற்கு மட்டும் முழங்கவில்லை; பாடவில்லை; விஞ்ஞான விடியலுக்காகவும் விழுமிய சிந்தனைகளை வழங்கினார்.

உள்ளச் சுனையில் ஊற்றெடுத்த கனவுகளை எல்லாம், கவிதை வெள்ளமாக ஓடவிட்டார்.

**அறிவியல் நோக்கு**

'வெள்ளிப் பனிமலையின் மீதுலவுவோம்' என்று பண்பாடினார்.

ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு தமிழ் மன்னர்கள் கொடி பதித்த அந்த இமய உச்சியில், இருபதாம் நூற்றாண்டு மனிதன் உலவினான்!

'சந்திர மண்டலத்தியல் கண்டு தெளிவோம்' என்றார் பாரதியார்.

1969 இல் -

அமெரிக்கா சந்திரனில் இறங்கியது!

> ***'காசி நகர்ப் புலவர் பேசும் உரைதான்***
> ***காஞ்சியில் கேட்பதற்கோர் கருவி செய்வோம்'***

என்று பாடிய பாரதி மறைந்த 19 ஆண்டுகளுக்குப் பிறகுதான்-

'வானொலி' இந்தியாவுக்கு வந்தது!

### பொறியியல் பார்வை

மகாகவியின் பொறியியல் திட்டங்கள், கனவுகள்:

*'வங்கத்தில் ஓடிவரும் நீரின் மிகையால்*
*மையத்து நாடுகளில் பயிர் செய்குவோம்'*

என்னும் கங்கை - காவிரி இணைப்புத் திட்டம், உருப்பெற வேண்டும்.

*'சேதுவை மேடுறுத்தி வீதி சமைப்போம்'*

சேது சமுத்திரத் திட்டம், உயிர்ப் பெற வேண்டும்.

அந்த நாட்கள் விரைவில் வரவேண்டும்; வரும்!

*வா,*
*அறிவியல் தமிழனாய் - நீ*
*அவதாரம் எடுத்தால்தான்*
*பொறியியல் உலகம்உன்*
*புலமையைப் பாராட்டும்!*

*வா,*
*புது வேகத்தோடு நீ*
*புறப்படு - உன் உள்ளங்கை*
*விதிரேகை என்பதனை*
*விஞ்ஞான ரேகையாக்கு!*

*ஆம், நீ*
*சோர்வை விட்டுச் சுறுசுறுப்புற்றால்*
*ஜப்பான், ஜெர்மனி வாய்பிளக்கும்;*
*போர்வை உதறி உறக்கம் விட்டால்*
*புதிய உலகின் தாள் திறக்கும்!*

4

# புதிய உலகின் தாள் திறக்கும்

அறிவியலும், தொழில்நுட்பமும் இரண்டு தண்டவாளங்களைப் போன்றவை.

மனிதர்களின் அன்றாட வாழ்வியல் நிகழ்வுகளில், அறிவியல் இரண்டறக் கலந்திருக்கிறது.

எனவே, உலக நாடுகள் அறிவியல் துறைக்கு முதலிடம் தந்து முன்னேறி வருகின்றன.

நம் மாணவ மாணவியர் அறிவியல் துறையில் மேம்பட்டு, இளம் விஞ்ஞானிகளாக வளர வேண்டும்.

**விஞ்ஞானக் கனவு**

*இருசன் ஓர் எடிசன் போல்*
*ஆவதெந்நாள்?*
*எட்வர்ட் ஓர் வில்பர்ரைட்*
*ஆவதென்று?*
*அருமைதாஸ் ஐன்ஸ்டீனாய்*
*மாறுவானா?*
*அப்துல்லா ஆம்ஸ்ட்ராங்காய்*
*ஆகுவானா?*

ஆவார்கள்... ஆகிறார்கள்!

### செய்திறன்

ஆசிரியப் பெருமக்கள், ஆர்வத்தோடு, மாணவச் செல்வங்களைத் தூண்டி, 'செய்திறன்' பயிற்சிகளில் ஈடுபடுத்த வேண்டும்.

அறிவியல் உண்மைகளைத் தினப்பாடம் செய்யும் மனப்பாடக் கிளிகளாக ஆக்காமல் -

மாணவர்களைப் புத்தகங்களுக்குக் கொத்தடிமைகளாக ஆக்காமல் -

'செயல்முறை' அறிவியலில் பரிசோதனைகள் செய்து பார்க்க வாய்ப்புகளை உருவாக்கித் தர வேண்டும்.

நகைச்சுவை நடிகர் கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணன் திரைப்படங்களில் தோன்றிச் சிரிக்க வைத்தார்; சிந்திக்கவும் வைத்தார்.

ஐம்பதாண்டுகளுக்கு முன்னாலேயே -

அவருடைய பாடல்களில் ஒரு பாடல்: ***'விஞ்ஞானத்தை வளர்க்கப் போறேண்டி...'***

நகைச்சுவையிலேயே நவீன விஞ்ஞானதத்தை வளர்க்க ஊக்கமூட்டும் பாடல்.

இன்றும், அதில் வரும் சிந்தனைகள் புதுமையாகவே தோன்றுகின்றன.

### இயற்கையே மூலம்

அறிவியல் கண்டுபிடிப்புகளுக்கு ஆதாரம் எது?

முன்னேறும் தொழில் நுட்பங்களுக்கு மூலப்பொருள் எங்கே?

எங்கேயும் இல்லை... இயற்கைச் சக்திகளிலே பொதிந்திருக்கிறது; புதைந்திருக்கிறது!

முன்னோடி விஞ்ஞானிகளின் முயற்சிகளுக்கு, மண்ணும் விண்ணும் மூலதனங்கள்!

நிலம் -

நீர் -

நெருப்பு-

காற்று-

வானம்-

இந்த ஐம்பூதங்கள், அறிவியலின் அறுவடைக்கு விதை மூலங்கள்!

ஆம்; இயற்கைதான் திறந்தவெளிப் பல்கலைக்கழகம்.

இயற்கையே, திறந்தநிலை ஆய்வகம்.

இயற்கைச் சக்திகளே மூலாதாரங்கள்!

**கனவுகள்**

*கதிரறுக்கும் பொன்னிமகள் எதிர்காலத்தில்*
*கதிர்வீச்சு அறிவியலில் கலக்க வேண்டும்!*
*மிதிவண்டி செலுத்துகிற மீரான் மகளோ*
*மின்னலிலே மின்சாரம் திரட்ட வேண்டும்.*

இந்தக் கனவுகள் -

நனவுகள் ஆகிக் கொண்டுதான் இருக்கின்றன!

**வந்த வழி**

அடுப்புக் கரியிலிருந்து -

அணுப்பொறிக்கு முன்னேறியிருக்கிறோமே, எப்படி?

களிமண் பொருளிலிருந்து -

கணிப்பொறிக்கு வளர்ந்திருக்கிறோமே, எவ்வாறு?

பழமையின் பரிணாமம் அல்லது புதுப்பித்தல்-

புதிய உத்திகளைப் பதிப்பித்தல்-

செய்திகளைச் சேகரித்து சிந்தனையைக் கூர்மைப்படுத்திச் சுயமான ஆய்வுகளில் ஆழ்ந்து...

தோய்ந்து...

ஆய்ந்தறிந்த அற்புதங்கள்!

**மூன்று வினாக்கள்**

*மாணவனே -*
*கனாக்குறிகளிலே காலத்தைக் கடத்தாமல்,*
*வினாக் குறிகளை எழுப்பு...*
*விடை கிடைக்கும்!*

*சிந்தி... சுயமாகச் சிந்தி...*
*நீ முந்தி நிற்க அதுதான் வழி!*

*'என்ன ? ஏன்? எப்படி?'*
*இந்த மூன்று வினாக்களைக் கேட்டு*
*உன் மூளைப் பரப்புக்கு வேலை கொடு.*

*'ஏணிப்படி? ' - என்று எண்ணிப்பார்*
*இதுதான் நீ உயர ஏணிப்படி.*

*'வா... இப்படி' அறிவியல் பக்கம் -*
*இதுதான் உனக்கு வாயிற்படி!*

*முன்னேற ஆய்வு நூலைப்படி;*
*அதுதான், நீ மேலேற மாடிப்படி!*

4.

**புதியன விரும்பு**

பாட்டுக்கொரு புலவர், நாட்டு நலக் கவி

மகாகவி பாரதியார் -

'புதியன விரும்பு' என்கிறார்...

புதியன விரும்பினால் போதாது.

புதுமைகளைப் படைக்கும் திறமைகளை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

**குப்பை - குட் பை**

எந்த ஒரு பொருளையும் - பயன்படுத்திய பிறகு, இந்தக் காலத்தில் தூக்கியெறிந்து விடுகிறோம்.

அதாவது, 'உபயோகி; தூக்கியெறி' (Use and throw) என்பது இந்த நூற்றாண்டின் சுலோகமாகவே ஆகிவிட்டது!

இதை நாம் வேத வாசகமாக ஏற்றுக் கொண்டு, உபயோகமற்ற 'குப்பை' என்று, அதற்கு 'குட் பை' சொல்லி - குப்பைத் தொட்டியில் எறிகிறோம்.

குப்பைத் தொட்டியில் தூக்கி எறிவதற்கு முன்னால், அதற்கு 'குட் பை' சொல்வதற்கு முன்னால், ஒருகணம் சிந்திப்போம்!... ( Best things can be derived from Dust bins also)

பயனற்றது என்று கழித்துக் கட்டுவதைப் பயன்படுத்த முடியுமா என்று எண்ணிப் பார்ப்போம்...

அதனை வேறு எதற்காகவது பயன்படுத்த முடியுமா என்று பல கோணங்களில் பரிசீலிப்போம்.

## ஒரு சின்னச் சம்பவம்

மாமல்லபுரம் கடற்கரை.

பொங்கல் விழா நேரம்... சுற்றுலாப்பயணிகள் கூட்டம்...

ஒருவன் கரும்பு விற்றுக் கொண்டிருந்தான்.

இந்தியன் ஒருவனும், ஜப்பானியன் ஒருவனும் ஆளுக்கு ஒரு கரும்புத் துண்டை வாங்கினார்கள்.

நம் ஆள் இந்தியன் - வேகவேகமாகக் கரும்பைக் கடித்துச் சக்கைகளைத் துப்பிவிட்டுப் போய்விட்டான்.

ஜப்பான்காரன் என்ன செய்தான், தெரியுமா?

கரும்புத்துண்டோடு ஒரு மூலையில் போய் உட்கார்ந்தான்.

தனக்கு முன்னால் ஒரு செய்தித்தாளை விரித்து வைத்தான். கரும்பின் மேல் பகுதியான தடித்த நரம்புப் பகுதியைப் பதமாகக் கடித்து நீளநீளமான பத்தைகளாக வைத்தான்!

தசைப் பகுதியைச் சுவைத்து, சக்கைகளைத் தாளில் துப்பினான்.

கரும்பைத் தின்று முடித்த பிறகு - சக்கைகளை, நரம்புப் பத்தைகளில் செருகி தன்னிடமிருந்த 'ஸ்கெட்ச் பென்'களால் அந்தச் சக்கைகளுக்கு வண்ணம் தீட்டினான். உறுதியான பட்டைகளில் அவற்றைச் செருகினான்.

பக்கத்தில், காலியான ஐஸ்கிரீம் குப்பி...

அதில் மணல் நிரப்பி, அழகான அலங்காரப்பூ போல (ஃப்ளவர் வாஸ்) வைத்தான்!

அழகிய கலைப்பொருள் உருவாகிவிட்டது!

'விற்பனைக்கு' என்று எழுதி வைத்தான்.

சற்று முன்பு - இவனைப் போலவே, கரும்புத்துண்டு வாங்கித் துப்பி விட்டுப் போனானே, அதே இந்தியன் திரும்ப வந்தான்.

ஜப்பானியனிடம் பத்து ரூபாய் தந்து அதை வாங்கிக் கொண்டு போனான்.

உபயோகமில்லாத ஒரு பொருளிலிருந்து-

'பயனுள்ளவற்றைத் தயாரிக்க முடியும்' என்பதை, எவ்வளவு அழகாக ஜப்பானியர்கள் கடைப்பிடிக்கிறார்கள்!

**மலிவு - பொலிவு**

அறிவியல் கண்காட்சிகளில் பங்கேற்கும் மாணவ மாணவியர், எளிய மலிவு விலை அறிவியல் சாதனங்கள் தயாரித்து நம்மை ஆச்சரியப்பட வைக்கிறார்கள்!

சமீபத்தில், கோவை பெரிய நாயக்கன் பாளையத்தின் மேல்நிலைப்பள்ளியில் 12ஆம் வகுப்புப் படிக்கும் ஒரு மாணவன் 'WASH - BE FIT' என்கிற புதிய சாதனத்தை உருவாக்கியிருக்கிறான்!

இதன் மூலம், உடற்பயிற்சி செய்துகொண்டே துணிகளைத் துவைக்க முடியும்!

இந்தச் சாதனம் தயாரிக்க அவன் பயன்படுத்தியவை: பழைய சைக்கிள், கிரைண்டர் பெல்ட், ஸ்டாண்டிங் பிளாஸ்டிக் தொட்டி-

சின்ன வயதிலேயே சிந்தனை விரிவாக்கம் பெற்றால், பெரிய சாதனைகள் புரியலாம்!

***சிந்தனை விரிவு***

சாதாரண இரும்புத் துண்டு ஒன்று கிடைக்கிறது...

அதன் மதிப்பு, பத்து ரூபாய்.

அதையே குதிரை லாடமாக்கி விற்றால், இருபத்தைந்து ரூபாய் கிடைக்கும்.

தொழில் திறமையுடையவன், அந்த இரும்புத்துண்டை ஊசிகளாக்கி விற்றால் சில நூறு ரூபாய் கிடைக்கும்.

மேலும் புத்திக் கூர்மை உள்ளவன் அதைக் கடிகாரச்சுருள்களாக்கி விற்றால், சில ஆயிரங்கள் கிடைக்கும்.

தொழில் நுட்பத்தில் தேர்ந்தவன் - அந்த இரும்புத்துண்டை ஆகாய விமானத்திற்கான சின்னசின்ன சாதனங்களாகச் செய்து விற்றால், பல ஆயிரம் ரூபாய் பெறலாம்.

பொருள் ஒன்றுதான்...

சாதாரண இரும்புத் துண்டு...

அதைப் பயன்படுத்துபவர்களுடைய சிந்தனைக்கும், உழைப்புக்கும், முயற்சிக்கும் ஏற்ற விளைவுகளைத் தருகிறது.

முயற்சி, எப்போதும் பழுதாவதில்லை!

'முயற்சி திருவினை ஆக்கும்' என்கிறார் வள்ளுவர்.

உண்மைதான்...

### ஒரு சின்னக் கதை

வாளியில், கால்பகுதி மோர் இருந்தது. அந்த மோர் வாளியில், இரண்டு தவளைகள் தவறி விழுந்துவிட்டன.

இரண்டும் வெளியே குதிக்க எம்பி எம்பிப் பார்த்தன; முடியவில்லை.

முதல் தவளை சோர்ந்து விட்டது... தன் முயற்சியைக் கைவிட்டதால், அது மோருக்குள் மூழ்கிவிட்டது.

இரண்டாவது தவளை தனது முயற்சியைக் கைவிடவில்லை. தன் பின்னங்கால்களால் - உதைத்து உதைத்துச் சுற்றிச் சுற்றி வந்தது....

என்ன ஆயிற்று தெரியுமா?

தவளை தன் பின்னங்கால்களால் உதைக்க, உதைக்க மோரில் அலையலையாகச் சுழல்கள் ஏற்பட்டன.

கட்டியாக வெண்ணெய் திரண்டது...

அந்த வெண்ணெய்க் கட்டியின் மீது ஏறிய இரண்டாவது தவளை, எம்பிக் குதித்து வாளியை விட்டு வெளியே வந்து விட்டது.

தன்னம்பிக்கையும், விடாமுயற்சியும் உடையவர்கள் தோற்பதே இல்லை.

**பூமிக்குப் புதிய அச்சு**

நம் மாணவர்கள் தாம் எந்தெந்தக் கோணங்களில் சிந்திக்கிறார்கள்!

எப்படியெல்லாம் புதியனவற்றை வடிவமைக்கிறார்கள்!

எளிமை! அருமை!

விரல் நுனியில் விடாமுயற்சி! நக நுனியில் நம்பிக்கை!

துருப்பிடிக்காத சுறுசுறுப்புச் சூரியன்களாக -

துருவ நட்சத்திரங்களாக-

தொடரும் சாதனையாளர்களாக -

இளம் விஞ்ஞானிகளாக -

மாணவர்களை இனங்காண முடிகிறது!

நம் மாணவர்கள் - விரல் முனையில் விஞ்ஞான நிலையங்களை வைத்திருக்கிறார்கள்!

நக நுனியில், தொழில் நுட்ப மையங்களைக் காட்டுகிறார்கள்!

இவர்கள் - வென்று காட்டுவார்கள்!

புதிய படைப்புகளால் - பூமிக்கே புதிய அச்சு போடுவார்கள்!

5

# உடலினை உறுதி செய்

கல்வி என்பது அறிவாற்றலை மட்டும் வளர்ப்பதன்று; உடலாற்றலையும் வளர்ப்பது.

உள்ளத்தைப் பண்படுத்துவது; ஆன்மாவை ஒருமுகப் படுத்துவது

"Education is the drawing out of the best in man and child -

body, mind and spirit"

இது நமது தேசத் தந்தை மகாத்மாவின் வாக்கு.

'தந்தை சொல் மிக்க மந்திரமில்லை...'

எனவே, அவரது வாக்கே நமது தாரக மந்திரம்.

மகாத்மா-

பள்ளிப்பருவத்தில், விளையாட்டில் ஆர்வமில்லாமல், உடற்பயிற்சி வகுப்புகளைப் புறக்கணித்து விடுவாராம்.

'உடற்பயிற்சியும், விளையாட்டுகளும் படிப்புக்கு உதவாதவை - பயனற்ற காலவிரயம்!' என்று கருதி, எந்த விளையாட்டிலும் பங்கேற்பதில்லையாம்.

ஆனால் -

பிற்காலத்தில், அதற்காக மிகவும் மனம் வருந்தித் தமது சுய சரிதையில் எழுதியிருக்கிறார்.

'Today I know the Physical Training should have as much place with curriculum as mental Training"

உடல், உள்ளம், ஆன்மாவின் ஒட்டு மொத்தமான - முழுமையான வளர்ச்சியே கல்வியின் இலக்கு.

உடல் வளமாகவும் நலமாகவும் இருந்தால்தான் - முழுமையான கல்வியை மாணவரால் பெற முடியும்!

உடல், உள்ளம், ஆன்மா இந்த மூன்றின் வளர்ச்சிக்கும் -

முதன்மையாக, மூலாதாரமாக இருப்பது உடற் கல்வி.

*'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்*
*திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்*
*உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்*
*உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே'*

என்கிறது திருமூலர் திருமந்திரம்.

ஒரு நாட்டிலுள்ள குடிமக்கள் - மனித இனம் - வளம் பெற, மனவளம் அடிப்படை.

அந்த மன வளத்திற்கு, உடல் வளமே ஆதாரம்.

'A sound mind in a sound body' - இது, அடிக்கடி அனைவரும் எடுத்துக்கூறும் பொன்மொழி.

*'ஒளிபடைத்த கண்ணினாய் வா வா வா*
*உறுதி கொண்ட நெஞ்சினாய் வா வா வா*
*களி படைத்த மொழியினாய் வா வா வா*
*கடுமை கொண்ட தோளினாய் வா வா வா!'*

· என்கிறார் பாரதியார்.

'ஒளிபடைத்த கண், உறுதிகொண்ட நெஞ்சம், களிபடைத்த மொழி, கடுமை கொண்ட தோள்' இவையனைத்தும் பெற திடமான, வலிவான உடம்பு தேவை.

எனவேதான் -

'உடலினை உறுதி செய்' என்கிறார் மகாகவி.

அதற்காக, 'ஓடிவிளையாடு பாப்பா' என்று சின்ன மழலைக்கு உபதேசித்து, 'மாலை முழுதும் விளையாட்டு' என்று நேரமும் வகுத்ததுத் தந்தவர், அவர்.

பகவான் இராமகிருஷ்ணர், 'உடம்பு ஆத்மாவின் கோயில்' என்கிறார்.

'உள்ளம் பெருங்கோயில் - ஊனுடம்பு ஆலயம்' என்பதில் அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கை.

சுவாமி விவேகானந்தர் கூறுகிறார்: 'உடம்பு மிகச் சிறந்த கருவி. உடலை வலிவுடையதாக்கு. எஃகைப் போல மாற்று. நோயற்றதாக வைத்துக் கொள். உடல்தான் உயிரின் காப்பகம்... எனவே, முதலில் திடமான உடம்பு கொண்ட மனிதர்களை உருவாக்க வேண்டும். அதன்பிறகு, மனித ஆற்றலை மேம்படுத்த வேண்டும்!'

வளருகின்ற இளைய பாரதம் -

மாணவர் தலைமுறை -

வலிவும் பொலிவும் மிக்க உடல் - திண்மையான உடல் - பெற்றிருந்தால்தான், வளமும் நலமும் மிக்க வாழ்க்கை வாழ முடியும் ('Strength is life; weakness is death').

இதற்கு ஊற்றுக்கண்ணாக இருப்பது -

உடற்கல்வி... உடல் நலக்கல்வி!

**அடடா, அந்த நாள்!**

குழந்தைப் பருவம், விளையாட்டில் ஆர்வம் மிகுதியான பருவம்.

என்னுடைய சிறுவயதில், நானும் நண்பர்களும் ஓடிவிளையாடிய நாள்கள் நினைவுக்கு வருகின்றன... மலரும் நினைவுகள்...

*மரங்கள் ஏறுவோம்... மாங்காய் பறிப்போம்...*
*ஆற்றில் நீந்துவோம்... ஆசனம் போடுவோம்...*
*கிட்டிப்புள் அடிப்போம்...*
*கிரிக்கெட்டும் ஆடுவோம்...*

*வீதிகளே எங்கள் விளையாட்டு மைதானங்கள்...*
*ஓடைக்கரைகளே எங்கள் ஓடுதளங்கள்...*
*கோலி - பம்பரம் எங்கள் நேயர் விருப்பம்!*

*விடுமுறை நாள்களில் எங்கள் வயிறுகளுக்கும்*
*விடுமுறை...*
*உணவு வேளைக்குச் செல்லாமல்*
*இடைவேளை இல்லாமல்*
*விளையாட்டு.... விளையாட்டு...*

இது, ஒவ்வொருவருடைய இளமைப் பருவத்திலும் நிகழ்வதுதான்.

தினம் தினம் உடற்பயிற்சி என்பது - பெரும்பாலோருடைய அன்றாடப் பழக்க வழக்கங்களில் இயல்பாகவே இடம் பெற்றுள்ளது (Movement is the basic of life).

ஆம்... அசைவுகளே வாழ்வியலின் அடிப்படை.

நிற்பது, நடப்பது, நிமிர்வது, குனிவது, உட்காருவது, ஓடுவது, குளிப்பது, துவைப்பது...

இவை எல்லாமே உடற்பயிற்சிகள்தாம்!

என்றாலும், இவற்றை முறையாகவும் சரியாகவும் செய்யப் பயற்சியளிப்பது உடற்கல்வி.

உடற் பயிற்சிகளும், விளையாட்டுகளும் உடலோம்பலுக்கு உதவுகின்றன; புலன்களுக்குப் புத்துணர்ச்சி அளிக்கின்றன.

**தேக சுகம்**

ஓட்டம், தொடரோட்டம் போன்றவை - இரத்த ஓட்டம் விருத்தியடையச் செய்கின்றன.

தாண்டுதல்கள் மூலம் தசைகளுக்கு வலிமை கிடைக்கிறது.

இயக்கப் பயிற்சிகள் மூலம், எலும்புகள் உறுதியடைகின்றன.

நடைப்பயிற்சிகள், நரம்புகளை முறுக்கேறச் செய்கின்றன.

பந்தாட்டங்களால், பல்வேறு சுரப்பிகள் பரபரப்படைகின்றன.

உள்ளரங்க விளையாட்டுகளால், உள்ளம் ஒருமுகப் படுத்தப்படுகிறது.

ஆசனப் பயிற்சிகள் மூலம், ஆன்மா தெளிவடைகிறது. சுவாசம் சீராகிறது; செரித்தல் எளிதாகிறது. உடலின் உள்ளுறுப்புகள் வலிவடைகின்றன!

மேலைநாடுகளில் 'உடலோம்பல்' முதன்மையிடம் பெறுகிறது. உடலோம்பலுக்குத்தான், முதல் விருந்தோம்பல்.

நாட்டிலுள்ள ஒவ்வொரு குடிமகனுக்கும், உடற்பயிற்சியும் விளையாட்டுகளும் கட்டாயமாகக் கற்றுத் தரப்படுகின்றன.

சிறிய கிராமங்களில் கூட, விளையாட்டரங்குகள் நிறுவப்படுகின்றன. பள்ளிகளில், பிற பாடங்களைப் போல உடற் கல்வியும் முக்கியத்துவம் பெறுகிறது.

சுதந்திர இந்தியாவின் முதல் கல்வியமைச்சராக இருந்த மேதை அபுல்கலாம் ஆசாத், உடற்கல்வியின் அவசியத்தை உணர்ந்தவர்; உணர்த்தியவர்.

"Sports and games have a very important role to play in the building up of a healthy nation" என்கிறார்.

'ஒரு நாடு அதன் வகுப்பறைகளில் உருவாக்கப்படுகிறது' என்று சொல்வதுண்டு.

ஒரு நாடு அதன் வகுப்பறையில் மட்டுமல்ல; விளையாட்டு மைதானத்திலும் உருவாக்கப்படுகிறது!

"The destiny of a nation is being shaped in her classrooms" என்கிற வாசகத்தோடு, இனிமேல், "and also in the playgrounds" என்பதையும் சேர்த்துச் சொல்ல வேண்டும்.

வகுப்பறைகள் படிப்புச் சிற்றறைகள்; விளையாட்டு மைதானங்கள் பயிற்சிப் பட்டறைகள்.

மைதானங்கள், மனித ஆற்றலை மேம்படுத்தும் ஆதார மையங்கள்.

நாட்டிலுள்ள கோளரங்குகள் (Planetarium) அறிவாற்றல் மேம்படச் செய்பவை. விளையாட்டுஅரங்குகள் (Gymnasium) உடலாற்றல் மேம்படச் செய்பவை.

அறிவாற்றலும், உடலாற்றலும் ஒருங்கிணைந்ததுதான் மனித ஆற்றல்.

அறிவாளர்களோடு ஆற்றலாளர்கள் இணைந்தால்தான் தேசம் முன்னேற முடியும்.

அரசுக் கோப்புகளை நிர்வகிக்கும் மேசைகள் மட்டுமல்ல - பரிசுக் கோப்பைகளைக் குவிக்கும் வெற்றி மேடைகள் கூட நாட்டின் வளர்ச்சிக்கும் பெருமைக்கும் காரணமாகின்றன.

எனவே-

ஆடுகளமும், ஓடுதளமும் நாடுவளம் பெற உதவுகின்றன!

ஆசிய மற்றும் உலக அளவிலான விளையாட்டுப் போட்டிகளில், சின்னஞ்சிறிய கடுகளவு நாடுகளெல்லாம் கூட பதக்கப் பட்டியலில் முன்னணியில் இருக்க - நமது இந்தியத் துணைக் கண்டம் பின்தங்கி இருந்தது!

என்ன காரணம்?

விளையாட்டுத்துறை விற்பன்னர்கள், முக்கியமான ஒரு கருத்தை முன் மொழிகிறார்கள்.

பிறநாட்டு விளையாட்டு வீரர்களுடன் போட்டியிடும் அளவுக்கு, நம் நாட்டு வீரர்களுக்குப் 'போதுமான உடல் திண்மை (stamina) இல்லை' என்கிறார்கள்!

தேவையான ஊட்டச்சத்துள்ள உணவும், உரிய தொடர் பயிற்சிகளும் போதுமான அளவில் இல்லாமையே காரணம்' என்றும் குறிப்பிடுகிறார்கள்.

வளரும் நாடுகளில், பல துறைகளில் வேகமான வளர்ச்சி பெற்று வரும் நமது பாரதம், விளையாட்டுத் துறையிலும் சவால்களைச் சந்தித்து, சாதனைகள் புரிந்து, சரித்திரம் படைக்க வேண்டும் என்பதில் மைய அரசும், நமது மாநில அரசும் மிகுந்த அக்கறை கொண்டுள்ளன என்பது மகிழ்ச்சியளிக்கிறது.

புதிய கல்விக் கொள்கையில் - உடற் கல்வித் துறையின் மேம்பாட்டுக்குச் சிறப்பிடம் தரப்பட்டு, பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டுள்ளது.

பெரும்பாலான மாணவர்கள் உடற் கல்வியில் உரிய நாட்டம் செலுத்தாமல் பிற பாடங்களில் மதிப்பெண் ஈட்டும் எந்திரங்களாக இருக்கிறார்கள்.

மனப்பாடக் கிளிகளாக மாறிவிடுகிறார்கள்.

புத்தகங்களுக்குக் கொத்தடிமைகளாய் இருக்கிற இத்தகைய பிள்ளைகளின் கவனத்தை ஈர்த்து, விளையாட்டுகளிலும் ஈடுபடச் செய்ய வேண்டும்; புலன்களுக்குப் புத்துணர்ச்சி ஊட்டவேண்டும்.

'All work; no play makes Jack a dull boy' என்கிறது ஆங்கில வாசகம்.

உடற் பயிற்சிகள் மற்றும் விளையாட்டுகள் மூலமாக மாணவர்களிடையே நற்பழக்கங்கள் வளர வாய்ப்புகள் மிகுதி. நற்பண்புகளை, செவி வழியாக அல்லாமல் செயல் வழியாகவே கற்க, கற்ற வழி நிற்க ஏராளமான சந்தர்ப்பங்கள் உள்ளன.

தனிநபர் விளையாட்டு மூலம் தன்னம்பிக்கை, துணிவு -

இரட்டையர் குழு விளையாட்டுகள் மூலமாக நட்புறவு, விட்டுக் கொடுக்கும் பண்பு -

குழு விளையாட்டுகள் வாயிலாகக் கூட்டுறவு, ஒற்றுமை -

மேலும், பல்வேறு விளையாட்டுகள் மூலம் -

பொறுமை, சவால்களைச் சந்திக்கும் சகிப்புத்தன்மை, மனிதநேயம், தேசப்பற்று, உலக ஒற்றுமை, தோல்வி கண்டு துவளாமை, தலைவனுக்குக் கீழ்ப்படிதல், பிறருக்கு உதவுதல் முதலிய நல்ல குணங்களைப் பெறுகிறார்கள்!

மாணவர்கள் நற்குடி மக்களாக வளர வாய்ப்பூட்டுவது, உடற் கல்வி.

இளைஞர்களை, மாணவர்களை 'விளையாட்டுப் பயல்கள்' என்பர் சிலர்.

விளையாட்டில், 'பயல்கள்' செய்த வெற்றிகள் ஏராளம்!

அவர்கள் வென்று வந்த உலகக் கோப்பைகளில், இந்திய உப கண்டமே மயங்கியதே!

விளையாட்டுத் துறையில் வெற்றிக் கொடி நாட்டிய தமிழகத்து மாணவச் சாதனையாளர்கள் எத்தனை பேர்!

உலக சாதனை புரிந்த குற்றாலீசுவரன்...

ஆசிய சாதனை படைத்த அமுதா...

தேசிய சாதனை படைத்த புவனேஸ்வரி...

இவர்களும், இவர்களைப் போன்றவர்களும்-

'புதிய உயரங்களைத் தொட்ட இளைய சிகரங்கள்!'

தமிழ் நாட்டின் பெருமையைத் தரணிக்குப் பறைசாற்றிப் பரணிபாடிய இவர்களைப் போல் -

மற்றும் பலர் சாதனையாளர்களாக வேண்டும்.

ஆறாம் வகுப்பில் சேரும் மாணவர் ஒவ்வொருவரும் -

பள்ளிப் படிப்பை முடித்து மதிப்பெண் சான்றிதழுடன் வெளியேறும் போது விளையாட்டுச் சான்றிதழ்கள் ஒன்றிரண்டாவது பெற்றுச் செல்ல வேண்டும்.

'பிள்ளைகளுக்குச் சரீரப் பயிற்சி ஏற்படுத்தாமல் வெறுமே படிப்பு மாத்திரம் கொடுப்பதால் அவர்களுக்கு நாளுக்கு நாள் ஆரோக்கியம் கெடுகிறது. அவர்கள், படித்த படிப்பெல்லாம் விழலாகும். எனவே, படிப்பைக் காட்டிலும் விளையாட்டுகளில் பிள்ளைகளுக்கு அதிக சிரத்தை ஏற்படச் செய்ய வேண்டும்' என்பார் பாரதியார்.

# 6.

## மெல்லினம்... மேலினம்!

சபர்மதி ஆசிரமம்.

தேசத்தந்தை மகாத்மா காந்திஜி தங்கியிருக்கிறார்.

அவரைச் சந்திக்க வந்தார் ஒருவர். அவருடன் ஒரு சிறுவன்; ஒரு சிறுமி.

வந்தவர், காந்திஜியிடம் பணிவாகச் சொன்னார்: ''அய்யா!.. இவர்கள் இருவரும் என்னுடைய குழந்தைகள்... இருவரையும் படிக்க வைக்க வசதியில்லை... யாராவது ஒருவரைத்தான் படிக்க வைக்க முடியும்...''

காந்திஜி சொன்னார்: ''அப்படியா? சரி... உன்னுடைய மகளைப் பள்ளியில் சேர்த்துவிடு... ஒரு பெண் படித்தால் அந்தக் குடும்பமே படித்ததாகும்!''

இன்னொரு காட்சி :

அலகாபாத் ஆனந்த பவனம்.

ஜவகர்லால் நேருவின் தாய் தந்தையர் ஆர்வத்தோடு காத்திருக்கிறார்கள்.. செய்தி வருகிறது...

'நேருஜியின் மனைவி கமலா நேருவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருக்கிறது' என்பது செய்தி.

''ஆனந்த பவனத்திற்கு இது ஆனந்தமான செய்தி!'' என்று ஆனந்தக் கூத்தாடினார் மோதிலால் நேரு.

ஆனால், 'உலகப் புகழ் பெற்ற நேருவுக்கு, ஆண் வாரிசு பிறக்கவில்லையே' என்று சொரூப ராணிக்கு வருத்தம். அதனால், 'பேரன் பிறக்கவில்லையே' என்கிற ஆதங்கத்தை வெளியிட்டார்.

மோதிலால் நேரு சொன்னார் : ''ஆயிரம் பேரன்களைக் காட்டிலும் அதிகமான மதிப்பை இந்தப் பெண்குழந்தை - நம் பேத்தி அடையப் போகிறாள் பார்'' என்றார்.

அவர் வாக்கு, சத்திய வாக்கு ஆயிற்று!

அந்தப் பேத்தி, ஆசியஜோதி நேருஜியின் மகள் இந்திராகாந்தி -

தந்தைக்கு நிகராக -

தரணி போற்றும் பெண் குலத்துப் பொன் விளக்காகப் புகழ் பெற்றார்!

'பெண் குலத்திற்குத் தன் மதிப்பளிக்காத நாடு பெருமையடையாது... வளர்ச்சியடையாது' என்பது சுவாமி விவேகானந்தர் வாக்கு.

தாய்க் குலத்தைத் தலை வணங்கிப் போற்றி உயர்வளிக்கும் நாடு நம் நாடு.

*'செறிவும் நிறைவும் செம்மையும் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பாலான'*

இப்படி - பெண்மை இலக்கணத்தைப் பெருமைப் படுத்துகிறார் தொல்காப்பியர்.

5.

*'மங்கையராகப் பிறப்பதற்கே - நல்ல*
*மாதவம் செய்திட வேண்டுமம்மா!'*

இது, கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் உன்னதமான கருத்து!

'ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னால், ஒரு பெண் இருக்கிறாள்' (There is a woman behind every successful man) என்பார்கள்.

மின் சத்தியை விடவும் மேலான சக்தி வாய்ந்தது பெண் சக்தி!

அறிவுக் கூர்மையில் பெண்களை மிஞ்ச முடியாது!

ஒரு வகுப்பில் - ஆசிரியர் மாணவர்களைப் பார்த்துக் கேட்டார்:

"உன் பக்கத்து வீட்டுக்காரியிடம் 40 பசுக்கள் இருக்கின்றன. உன்னிடம் 17 பசுக்கள் மட்டுமே உள்ளன... அப்படியானால், நீ என்ன செய்வாய்?"

மாணவி தயங்காமலே சொன்னாள்: "நான், பக்கத்து வீட்டுக்காரியுடன் சேர்ந்து பால் பண்ணை தொடங்குவேன் சார்!"

பெண்கள், புத்திக் கூர்மை மிக்கவர்கள்.

பல நூற்றாண்டுகளுக்கு முன்பு நடந்த ஒரு சம்பவம்:

சோழநாடு...

அரசவைப் புலவர் அறிவாகரன்.

அவர் மனைவி சந்திரகாந்தம்.

அந்த நங்கை நல்லாள் தாய் வீட்டிற்குச் சென்றிருந்தாள்.

அந்த நேரத்தில், சோழமன்னன் அரசவைப் புலவர்களிடம் இரண்டு கேள்விகள் எழுப்பினான்:

"பிறந்து அசையாப் பெற்றிது, எது?

பேரொளியின் வரவறிந்து ஓதுவது எது?".

இந்த இரண்டு கேள்விகளுக்கும் யாராலும் விடை கூற இயலவில்லை!

சினம் கொண்ட அரசன், புலவர்களைச் சிறையிட்டான்!

தலைமைப் புலவர் அறிவாகரனும் தண்டனைக்குள்ளானார்!

செய்தியறிந்து விரைந்தோடி வந்தாள் சந்திரகாந்தம்.

சோழ மன்னனைச் சந்தித்து, அவன் எழுப்பிய வினாக்களுக்கு விடை கூறினாள்:

"பிறந்து அசையாப் பெற்றியது, முட்டை;

பேரொளியின் வரவறிந்து ஓதுவது, சேவல்!"

அவளது விடை கேட்டு அரசன் பாராட்டினான்; அவள் கணவன் அறிவாகரனை விடுதலை செய்தான்.

பெண்ணின் அறிவுக் கூர்மை, கணவனைச் சிறை மீட்டது!

**முன்னேற்றங்களுக்கு அடித்தளம்**

ஒரு தேசத்தின் முன்னேற்றம் என்பது, சமுதாய முன்னேற்றம்.

அந்தச் சமுதாயத்தின் முன்னேற்றம் என்பது, தனிமனித முன்னேற்றம்.

மனித முயற்சிகள், முன்னேற்றங்களுக்கு அடித்தளம்-

பெண்ணினமே!

**பெண்ணடிமை**

இந்தப் பெண்ணினம் - பல நூற்றாண்டு காலமாகக் குடும்ப பாரம் சுமக்கும் கொத்தடிமைகளாக, வீட்டுச் சிறைக்குள் முடக்கப்பட்ட சிற்றடிமைகளாக நடத்தப்பட்ட நிலைமை உண்டு!

அடுப்படியில் சமையற்காரியாய்...

கிணற்றடியில் சலவைக்காரியாய்...

அலுவலகத்தில் வேலைக்காரியாய்...

அவதிப்பட்டு, அல்லல்பட்டு, மீட்சியில்லாமல் இருந்த கொடுமை உண்டு!

ஆணாதிக்கத்தின் ஆளுகைக்குள் -

கல்வி வாய்ப்பூட்டாமல் -

'வாய் பூட்டிய' ஊமைகளாய்ப் பெண்கள் உலவி வந்ததும் உண்டு!

மண் விடுதலையோடு - பெண் விடுதலைக்கும் பாடுபட்ட சமூகச் சீர்திருத்தவாதிகளின் எழுத்துகள்... பேச்சுகள்.

பெண்ணுரிமை இயக்கங்களின் அறைகூவல்கள்...

மகளிர் மேம்பாட்டிற்கு அடிகோலின.

### அஸ்திவாரங்கள்

பெண்களை, 'நகைதாங்கி, உடைதாங்கி' என்று நையாண்டி செய்த ஆடவர்க்குச் சவாலாக - படைதாங்கிப் போர் நடத்தும் பலசாலிகளாகப் பவனி வருகிறார்கள் பெண்கள்!

'பெண்கள் மெல்லினம்... ஆண்கள் மேலினம் என்பதெல்லாம் பிதற்றல்கள்' என்று எதிர்த்துக் கூறி, சர்வ வல்லமை படைத்த சக்தி அவதாரங்கள் என்பதை மெய்ப்பித்து வருகிறார்கள்!

'அலங்காரப் பதுமைகள்' என்று ஆணாதிக்கம் அலட்சியப் படுத்தியதைப் பொருட்படுத்தாமல் -

'பெண்கள் அலங்காரங்கள் அல்ல; நாட்டில் அத்தனை துறைக்கும் அஸ்திவாரங்கள்!' என்பதை அடையாளம் காட்டி வருகிறார்கள்.

## நிகர் வரிசை

அடுப்பு உலை இறக்கும் கை -

அணு உலையைத் திறக்கும் கையாகிறது!

இன்றைய புதுமைப் பெண்களுக்குக் கரண்டி பிடிக்கவும் தெரியும்... கராத்தே அடிக்கவும் தெரியும்!

தோசை சுடவும் தெரியும்.. துப்பாக்கி சுடவும் தெரியும்!

பூக்குலங்களுக்கு, போர்க்களங்கள் புதிதல்ல!

அடுப்புக்கரியை எரிக்கவும் தெரியும்; அணுப்பொறியை இயக்கவும் தெரியும்!

வீட்டுக் கூடத்தைக் கூட்டிப் பெருக்கவும் செய்வார்கள்... விண்வெளி ஓடத்தை ஓட்டிப் பறக்கவும் செய்வார்கள்!

கனரக வாகனமா? கம்ப்யூட்டர் சாதனமா?

பூவையர்கள், 'ப்பூ..' என்று ஊதித் தள்ளுகிறார்கள்!

நாகர் கோவிலில், பேருந்து ஓட்டுகிறார் ஒரு நங்கை...

சேலத்தில் - வேடந்தாங்கலில் டிராக்டர் ஓட்டி விவசாயம் செய்கிறார்கள், கண்மணிகளுக்கு நிகரான பெண்மணிகள்.

சென்னையில், ஆட்டோ ஓட்டுகிறார்கள் - பட்டங்கள் பல பெற்ற பெண்கள்!

**பெண்களின் விரல்களை -**

**'வெண்டைக்காய் விரல்கள்' என்றுவேடிக்கை செய்தார்களே!**

**'விஞ்ஞானம் இன்றந்த வெண்டைக்காய் விரல்களிலே!**

**எண்ணறிவில் , எழுத்தறிவில் ஆடவர்க்கு மேல்வரிசை!**

**[illegible]ரிவல், நூலறிவில் ஆண்களுக்கு நிகர் வரிசை!**

### எங்கெங்கு காணினும்...

திரும்பிப் பாருங்கள்... திசை எங்கும் பாருங்கள்...

இராணுவச் சீருடையில் வீராங்கனைகள்!

காக்கிச் சீருடையில், காவல்துறையினர்!

வெள்ளைச் சீருடையில் மருத்துவச் செவிலியர்கள்!

வெள்ளைக் கோட்டுக்குள் மருத்துவர்கள்!

கறுப்புக் கோட்டுக்குள் வழக்கறிஞர்கள்!

நீதி தேவதைகளாக - நிர்வாக அதிகாரிகளாக, அமைச்சர்களாக, சட்டமன்ற - நாடாளுமன்ற உறுப்பினர்களாக, மாவட்ட ஆட்சியர்களாக, பொறியாளர்களாக, தொழில் நுட்ப வல்லுநர்களாக...

ஆசிரியைகளாக .. பல்கலைக் கழகத் துணைவேந்தர்களாக...

எழுத்தாளர்களாக, இதழாசிரியர்களாக, திரைத்துறை வல்லுவர்களாக...

இப்படி, துறைதோறும் துறைதோறும் -

பெண்கள் தொடாத துறை இல்லை; துலங்காத துறையே இல்லை!

### கணிப்பு - புறக்கணிப்பு

பெண் கல்வி முன்னேற்றத்திற்கும் -

மகளிர் வாழ்க்கை மேம்பாட்டிற்கும்-

மைய, மாநில அரசுகள் ஏராளமான சலுகைகளையும் உரிமைகளையும் வழங்கியுள்ளன.

இத்தனை வாய்ப்புகள் வசதிகள் இருந்தும்கூட, பெண்களின் கல்வி வளர்ச்சி எதிர்பார்க்கும் நிலைமைக்கு ஏற்றதாக இல்லை!

அதிலும், கிராமப் புறங்களில் கற்ற பெண்கள் சதவீதம் பாதியைக்கூட ' 100க்கு 50 என்கிற அளவைக் கூட எட்டவில்லை!

அண்மையில், உலக வங்கி ஒரு கணக்கெடுத்திருக்கிறது :

'கி.பி.2000 இல் உலகம் முழுவதும் கல்லாதவர் எண்ணிக்கை 95 கோடி இருக்கும். இதில் 50 கோடிப் பேர் இந்தியாவில் இருப்பார்கள். 15 வயது முதல் 19 வயது வரை கல்லாதவர் 100க்கு 54பேர் இருப்பார்கள்!' என்று சுட்டிக் காட்டியிருக்கிறது.

ஓரளவு எழுதப் படிக்கக் கற்றவர்கள் - பள்ளியிலிருந்து இடையில் நின்றவர்கள் முதலானவர்க்குத் 'தொடர்கல்வி' வாய்ப்பு வழிகாட்டுகிறது.

தொடர்கல்வி மையங்களில் - தொடர்ந்து கற்கும் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ள கிராமப்புறத்துப் பெண்களைத் தூண்டி ஆர்வமூட்டுவதில் மகளிர் மன்றங்களுக்குப் பெரும் பங்கு உண்டு... பெருமளவில் பெண்கள் சேர்ந்து, கல்வியைத் தொடர வேண்டும்...

**பெண்கல்வி**

***'கல்லாத பெண்கள் களர்நிலம்; அங்கே***
***புல்விளைந்திடலாம்; நல்ல***
***புதல்வர்கள் விளைவதில்லை!'***

என்று ஆவேசமாகச் சாடுகிறார் பாவேந்தர் பாரதிதாசன்.

***'பெண்களறிவை வளர்த்தால் வையம்***
***பேதைமையற்றிடும்!'***

என அழுத்தமாய்ப் பாடுகிறார் பாரதியார்.

***'ஒரு பெண்ணுக்குக் கற்பித்தால்***
***அது சமுதாயத்திற்கே பயன்படும்'***

என்பார் மகாத்மா காந்தி.

இப்போது, பெண்கல்வியை மேம்படுத்தச் செயல் திட்டங்கள் தயார். பயிலரங்குகள், செயலரங்குகள், ஆய்வரங்குகள், கருத்தரங்குகள் ஏராளம்.

இவற்றைப் பயன்படுத்திக் கொண்டு -

முன்னேறுவதற்குப் பெண்குலம் முன்வர வேண்டும்.

**செயலனுபவம்**

தொடர்கல்வி மையங்கள் வாழ்வியலுக்குத் தேவையான அம்சங்களைக் கற்பிக்கின்றன...

செயல் அனுபவக் கல்வி வாயிலாக, ஏற்கெனவே கற்ற கல்வியை வளப்படுத்தி, வலுப்படுத்தி, நிலைப்படுத்தி வாழ்க்கைத் தரத்தை மேம்படுத்துகின்றன!

அறிவுத் திறன்களை மட்டுமல்லாமல் தொழில் திறன்களையும் வளர்க்கின்றன.

இவை -

தொடர்ந்து கற்றலுக்கான சூழலை உருவாக்கி, ஆண் - பெண் சமத்துவ நோக்கோடு கற்பிப்பதில் முன் நிற்கின்றன!

**சுயதொழில்**

சிறுதொழில்கள் செய்வது எப்படி?

செய்யும் தொழிலில் உழைப்பாற்றலை வளர்ப்பது எப்படி?

சுயதொழில் தொடங்கும் வழிகள் என்ன?

சுற்றுச்சூழல் பாதுகாப்பைக் மேம்படுத்துவது எவ்விதம்?

என்பனவற்றோடு -

குடும்பப் பராமரிப்பு, குழந்தை வளர்ப்பு, சிறுசேமிப்பு, குடும்பநலம், பொது சுகாதாரம் இப்படியாகப் பலவேறு கோணங்களில் செயல் அனுபவக் கல்வி தரப்படுகிறது!

**நமது கடமை**

இந்தத் தொடர் கல்வித் திட்டத்தில் மகளிர் பங்கேற்பை ஊக்குவிப்பது நம் ஒவ்வொருவருடைய தலையாய கடமை.

தொடர்கல்வித் திட்டத் திசைகாட்டிகளாக, வட்ட வழிகாட்டிகள் பணியாற்றுகிறார்கள்.

தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள், மகளிர் கல்வி மேம்பாட்டிற்கு மேலும் ஒத்துழைப்பு நல்க வேண்டும்.

அனைவரும் ஒருங்கிணைந்து உறுதியோடு முயன்றால்...

*கதிரறுக்கும் கறுத்தம்மாவும்*
*கையெழுத்துப் போடலாம்!*
*புல்லறுக்கும் பொன்னி, புதிய*
*புத்தகங்கள் படிக்கலாம்!*
*கல்லுடைக்கும் கமலம்கூட*
*கணக்குப் போட்டுப் பழகலாம்!*

*ஆடுமேய்க்கும் அஞ்சலைக்கும்*
*அந்தி நேரம் பாடங்கள்!*
*மாடுமேய்க்கும் மரகதமும்*
*மாலை நேரம் கற்கலாம்!*
*பீடி சுற்றும் பிரியா கூட*
*பேப்பர் வாங்கிப் படிக்கலாம்!*
*காடுமேடு வரப்புகளில்*
*கல்வி ஓசை கேட்கலாம்!*

*நாற்றுநடும் நாகம்மாவும்*
*நாலெழுத்துக் கற்கலாம்!*
*நாலெழுத்து படித்தவரோ*

*மேலெழுத்துப் படிக்கலாம்!*
*பஞ்சுநூலை நூற்பவரும்*
*பாடநூலைப் படிக்கலாம்!*
*பட்டறையில் உழைப்பவரும்*
*நூலகத்தில் படிக்கலாம்!*

கல்லாத பெண்கள் அனைவரும் -

தொடர்கல்வி மூலம், அன்றாட வாழ்க்கைக்கான கல்வியைப் பெற ஆர்வம் கொள்ள ஊக்குவிப்போம்!

**கம்ப நாடன்**

கம்பராமாயணத்தில் - கவிச்சக்கரவர்த்தி ஒரு காட்சியைச் சித்திரிக்கிறார் :

கோசல நாட்டில், பெண்கள் அனைவரும் கற்றவர்களாம்!

'பெருந்தடங்கண் மாதரார்க்கெலாம் பொருந்து கல்வியும் செல்வமும்' கிடைத்தனவாம்!

கோசலம், 'கல்லாரில்லாத நாடு' என்கிறார்!

கம்பன் காட்டிய அந்த நாடு -

நம் தமிழ் நாடாக வேண்டும்...

**பெண்மை வாழ்க**

*'பெண்மை வாழ்கென்று கூத்திடுவோமடா!*
*பெண்மை வெல்கென்று கூத்திடுவோமடா!'*

என்று தோள் தட்டிப் பாடிய பாரதியைப் போல் -

பெண்மையை மேம்படுத்தி, மகளிரை மாண்புறச் செய்து-

நாமும் தோள் தட்டிப் பெருமிதம் கொள்வோம்.

## 7

# அமுதசுரபி

எழுத்தாளர்கள் தங்கள் எண்ணங்களைச் சேமித்து வைத்தால், அவை புத்தகங்களாக உருவெடுக்கின்றன.

இது, இலக்கியச் சேமிப்பு.

புத்தகங்களைப் படித்து அந்தக் கருத்துகளைச் சேமித்து வைத்தால், அவை நம்மைப் பண்படுத்திக் கொள்ள உதவுகின்றன.

இது, பொது அறிவுச் சேமிப்பு.

கைப்பொருளைக் கண்டபடி செலவழிக்காமல் சேமித்து வைத்தால், அது வருங்காலத் தேவைக்குப் பயன்படுகிறது.

இது, வாழ்க்கை வளச் சேமிப்பு!

சிறுவயதில் சேமிக்கத் தொடங்கும் பழக்கம், நரைவயது வரையில் தொடரும்; துணை செய்யும்!

### குழந்தைகளுக்கு

அம்மாவோ, அப்பாவோ -

அப்பாவுக்குத் தெரியாமல் அம்மாவோ, அம்மாவுக்குத் தெரியாமல் அப்பாவோ -

அல்லது இருவருமோ 'பாக்கெட் மணி' தருகிறார்கள்.

'பைக்காசு', செலவழிக்கத் தூண்டுகிறது... பைக்காசைச் செலவழிக்க, கைக்கு ஆசை!

கைக்காசை மிச்சம் பிடிக்க, மனத்தில் ஆசை வர வேண்டாமா?

### *சின்னச் சின்ன ஆசை*

எதை எதையோ வாங்க, மாணவர்களுக்கு எத்தனையோ ஆசை!..

சின்ன சின்ன ஆசை...

செலவழிக்க ஆசை!

ஆனால், ஆசைகளைச் சிக்கனமாக்கிக் கொண்டு, சில்லறைக் காசுகளைச் சேமிக்கப் பழகுவது எதிர்காலத்திற்கு நன்மை தரும்.

சிக்கனம் - இலக்கணம்; சேமிப்பு - இலக்கியம்.

ஆம் -

"Small savings today - Big wings tomorrow"

### ஒரு முன்மாதிரி

ஒரு சின்னஞ்சிறு தேனீ...

பூந்தோட்டத்தைச் சுற்றி வருகிறது...

பூக்களிலிருந்து தேனை உறிஞ்சுகிறது...

அளவோடு பருகிவிட்டு, தேன்கூட்டில் கொண்டுபோய்ச் சேமிக்கிறது.

ஒரு பவுண்டு தேனைச் சேர்க்க, ஒரு தேனீ, எத்தனை பூக்களிலிருந்து திரட்டுகிறது?

20 ஆயிரம் பூக்களிலிருந்து!

அடேயப்பா!

தேனீயின் திட நம்பிக்கை...

விடாமுயற்சி...

சுறுசுறுப்பு

எல்லாம் எதற்காக?

சேமிப்பதற்காக!

சின்னத் தேனீக்களால் செய்யக் கூடியதை, சிறிய மாணவர்களால் செய்ய முடியாதா?

சிந்திப்போம் ; சேமிப்போம்!

**முன்னெச்சரிக்கை**

மழைக்காலத்திற்கு உதவுமென்று , முன்னெச்சரிக்கையோடு -

சிற்றெறும்புக் கூட்டம், சாரை சாரையாகப் புற்றுக்குள் தானியத்தைக் கொண்டு போய்ச் சேமித்து வைக்கிறது.

சின்ன எறும்புகள் செய்யக் கூடியதை, சின்ன அரும்புகளால் செய்ய இயலாதா?

**முன்னேற்பாடு**

உங்களுக்கு, அணில் தெரியும்.

அணிலை, கவிஞர் இளந்தேவன் 'வால் முளைத்த சுறுசுறுப்பே' என்று பாடினார்.

மாணவர்கள் அணில்கள் போலத்தான்...

ஆனால், வால் முளைக்காத சுறுசுறுப்புகள்!

நீதிக் கதைகளில், அணிலுக்கு 'நல்ல பிராணி' என்று ஒரு செல்லப் பெயர் உண்டு.

காரணம்?

அணில், பழக் கொட்டைகளைப் புல் வெளிகளில் சேமித்து வைக்கும்.

இந்த ஒரு நல்ல பழக்கத்திற்காகவே, அணில் நல்ல பெயர் பெற்றது.

பிராணியான அணிலுக்குத் தெரிந்தது, மாணவ அணிக்குத் தெரியாதா என்ன?

**நீர்ச்சேமிப்பு நிலையம்**

கடலைப் பார்த்திருப்பீர்கள்... எவ்வளவு தண்ணீர்!

கடல்... 'ஒரு நீர்ச் சேமிப்பு நிலையம்!'

அதில் -

எத்தனை ஆற்று நீர் மொத்தமாய்ச் சேர்ந்துள்ளது!

அதிலிருந்துதானே, வானம், வேண்டுகிற போது நீரை மேகச் செம்பால் மொண்டு - மழையை நமக்குத் தானமாகத் தருகிறது!

சேமிப்பு -

தேவைக்கு உதவும்.

**அமுத சுரபி**

சிறு சேமிப்பு ஒரு நல்ல திட்டம்.

குழந்தைகளுக்கு, மாணவப் பருவத்தில் சேமிப்பதற்கு வழிவகுக்கும் அற்புதமான திட்டம்.

கொஞ்சம் கொஞ்சமாக வாங்கி, நெஞ்சம் நிறையத் தரும் அமுதசுரபி - சிறுசேமிப்பு.

குறுந் தொகையை - பெருந் தொகையாக்கும் தினை யாகம்!

அது, பணயோகம்!

சிக்கனம் வீட்டைக் காக்கும்.

சேமிப்பு நாட்டைக் காக்கும்

இது, மெய்யான வாக்கு.

உங்களுக்குத் தெரியுமல்லவா?

ஒட்டகம், வயிறு முட்டத் தண்ணீர் நிரப்பிக் கொண்டு பயணத்திற்குத் தயாராகிறது.

பாலைவனத்தில் பயணம் செய்யும்போது -

ஒட்டகம் சேமித்து வைத்த நீரைப் பயன்படுத்திக் கொள்கிறது.

சேமித்த தண்ணீர், தக்க சமயத்தில் உதவுகிறது...

எந்தச் சேமிப்பும் அப்படித்தான்!

**நிற்பதுவே... நடப்பதுவே**

தாவரங்கள் உணவைச் சேமித்து வைக்கின்றன...

உரிய தருணத்தில் உபயோகப்படுத்திக் கொள்கின்றன.

நமக்கும் பயன் தருகின்றன.

ஐந்தறிவுள்ள அஃறிணை உயிர்களுக்கே சேமிப்பின் சிறப்புத் தெரியும்போது -

ஆறறிவுள்ள உயர்திணை மனிதர்கள் உணராமல் இருக்கலாமா?

### தினசரி அனுசரி

சின்ன மாணவனே! 'நாளையின் சின்னமான'வனே!

*தினசரி...*
*நல்ல பழக்கத்தை*
*அனுசரி...*
*அதுதான் சேமிக்கும் நன்னெறி.*
*சரிசரி என்று*
*சம்மதிப்பதுபோல்*
*தலையாட்டிவிட்டு*
*சற்றும் பொறுப்பில்லாமல் இருந்துவிடாதே!*

### கைப்பொருள் - மெய்ப்பொருள்

சின்ன வயது -

நல்ல பழக்கங்களுக்குச் சின்னமாகும் வயது.

சேமிப்பு, நல்ல பழக்கம்.

மாணவர்கள் சிக்கனத்தின் இலக்கணமாகவும், சேமிப்பின் இலக்கியமாகவும் விளங்க வேண்டும்.

தேயக்கூடாது, கைப்பொருள்.

அதைச் சேமிப்பதுதான் மெய்ப்பொருள்!

'சேமிக்க ஓயக்கூடாது...' என்பதில்-

கண்ணும் கருத்துமாக இருக்க வேண்டும்.

சேமிக்கும் பழக்கத்தால் -

'இந்தப் பூமிக்குப் புதிய திசை காட்டுவோம்!'

8

# மரணத் தரகர்கள்

'அரிதரிது, மானிடராய்ப் பிறத்தல் அரிது!'

மானிடப் பிறவியிலே கூட, மாணவப் பருவம் - இளமைப் பருவம் என்பது ஒரு பொற்காலம்.

'மேன் ஏஜில்' (Man-age) 'டீன் ஏஜ்' என்பது, ஒரு 'கோல்டன் ஏஜ்!'

இந்த 'டீனேஜில்' - தன்னைத்தானே 'மேனேஜ்' செய்யத் தவறிவிட்டால், வாழ்க்கை 'டேமேஜ்' ஆகிவிடும்!

வார்த்தை அலங்காரத்திற்காக இப்படி வருணிக்கவில்லை.

இந்த 'வார்த்தைக் கோப்பு'களைச் சேர்த்துப் பார்த்தால், வாழ்வியல் உண்மை புரியும்.

குமரப் பருவம் - நிமிரும் வாலிபம்; திமிறும் வயது.

தடுமாற்றமும், தட மாற்றமும் திசைமாற்றும் வயது!

6.

மனம், தேவையற்ற பழக்கங்களைத் தினம் தேவையெனத் தேடும்.

பாதை மாற்றுவதில் -

போதைப் பழக்கமும் ஒன்று.

போதைப் பழக்கம், சமுதாயத்தைச் சீரழிக்கும் தொற்றுநோயாகப் பற்றிப் படர்ந்து வருகிறது; ஒழுக்கமும் பண்பாடும் உருக்குலையுமாறு செய்கிறது!

வயோதிகர்களை, வாலிபர்களை மட்டுமல்ல -

'குமரப் பருவத்தையும்' இந்தக் கொள்ளை நோய் தாக்கத் தொடங்கிவிட்டது!

மது அரக்கன், மாணவர்களையும் விட்டு வைக்கவில்லை.

போதைப் பொருள்கள் , எந்தெந்த வடிவங்களில் அவதாரம் எடுக்கின்றன?

எல்.எஸ்.டி போதை மாத்திரைகளாக -

கஞ்சா, ஓபியம், ஹெராயின் (ப்ரவுன் ஷுகர்) போன்ற பவுடர் (தூள்)களாக ...

பெதடின் ஊசி வழித் திரவமாக...

பல்வேறு பெயர்களில் மதுப்புட்டிகளாக...

நாட்டுப்புறங்களில் கள், சாராயமாக...

'சிகரெட்' என்னும் வெள்ளை எமனாக...

'பான் பராக்' என்னும் உயிர்ப் பகையாக ...

வகைவகையாக...

மனிதனை 'ஆட்கொள்ளுகின்றன!'

ஆட்கொள்ளும் இவை, ஆட்கொல்லிகள்!

இனிமையான உயிர்க்கொல்லிகள்!

போதை மாத்திரை, இறுதி யாத்திரைக்கான டோக்கன்!

புகை, உயிருக்குப் பகை!

மதுவும், போதையும் மரணத் தரகர்கள்!

மாயச் சுகம் தரும் நோய் விதைகள்!

இது-

தெளிவாகப் புரிந்தும் கூட, பலர் பலியாகக் காரணம் என்ன?

பொதுமக்கள் தொடர்புச் சாதனங்களான தொலைக்காட்சி, பத்திரிகைகள், திரைப்படங்கள் முதலியவற்றில் இடம் பெறும் நிகழ்ச்சிகள் பல.

நாடகங்களில் கௌரவமான பாத்திரங்கள் கூட -

குடிப்பதை, சிகரெட் புகைப்பதைக் காண்கிற போதும் -

திரைப்படங்களில் தனக்குப் பிடித்த நடிகர்கள் நடிப்புக்காகக் குடிப்பதையும், புகைப்பதையும் பார்த்து அந்தப் பாணியை அப்படியே பின்பற்ற நினைக்கிற போதும் -

குமரப் பருவத்து இளைஞர்கள் - பெரியவர்களைப் பின்பற்ற முயல்கின்றனர்.

'மதுவும் போதையும் மன வேதனைக்கு மருந்து - விழாக்கால மகிழ்ச்சிக்கு விருந்து' என்று ஒரு சாரார்-

நண்பர்களின் வற்புறுத்தலுக்காக 'கம்பெனி' கொடுக்கத் தொடங்கி , கரைந்து போகிற ஒரு பகுதியினர்-

புது வகையான சுகம் என்று புதைந்து போகிற கொடுமை!

சின்ன வயதிலேயே, நம்பிக்கைச் சின்னமாக வளர வேண்டியவர்கள், சிதைந்து போகிற பரிதாபம்!

மேலை நாட்டு நாகரிக மோகம் -

பெற்றோர்களின் புறக்கணிப்பு...

இப்படிப் பல வகையான காரணங்கள் வழிதவறச் செய்கின்றன.

விளையாட்டாகத் தொடக்கம்; பிறகு விடுதல் அறியா விருப்பம்!

விட முடியாத பழக்கம் -

அதுவே நிரந்தர மயக்கம் என்கிற நிலைக்கு ஆளாகி அமிழ்ந்து விடுகிறார்கள்.

நிலை தப்பிய வகையில் தலை குப்புற விழுந்து, தடம் மாறி, அதிலேயே தடுமாறிக் கிடக்கிறார்கள்.

இதன் விளைவுகள் என்ன?

விபரீதமானவை!

உடல் அளவில் போதைப்பொருள்களின் ஆதிக்கம்.

*'துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எந்நாளும்*
*நஞ்சுண்பார் கள்ளுண்பவர்'*

என்கிறார் வள்ளுவர்.

கள் மட்டுமல்ல... போதைப் பொருள்களும்தாம்!

இந்த நஞ்சு - இரத்த மண்டலத்திற்குள் நுழையும்போது... அங்கே சத்தமில்லாமல் ஒரு யுத்தம் நடக்கிறது!

போதை நச்சுச் சக்திகளை வெல்ல முடியாமல் -

இரத்த மண்டலப் போர் வீரர்களான வெள்ளை அணுக்கள், புறமுதுகு காட்டுகின்றன!

பிறகென்ன?

இரத்த ஓட்டம் முழுக்கப் 'போதை'ப் பொருளின் தொடர் ஓட்டம்தான்!

இரத்த மண்டலப் போர் வீரர்களான வெள்ளை அணுக்கள் புறமுதுகு காட்டிய பிறகு - நரம்பு மண்டலத்தின் சிற்றரசன் 'சிறு மூளை' சிறைப் படுத்தப்படுகிறான்!

பேரரசன், 'பெருமூளை' பதவி இழக்கிறான்!

உடம்பின் ஐம்புலன்களையும், 'போதை அரக்கன்' சர்வாதிகாரியாகிக் கொடுங்கோல் ஆட்சி செய்கிறான்.

கல்லீரல் பாதிப்பு, கணையத்தில் பாதிப்பு! -

எனவே, மஞ்சள் காமாலை!

நுரையீரல் பாழாக, காசநோய்க்கு ஆளாக - நோய்கள்!

தொற்று நோயாய்ப் பற்றிய புகைப் பழக்கம், புற்று நோயாகும்!

கை கால் நடுக்கம்... தள்ளாட்டம்!

கற்கோட்டையாக இருக்கும் உடம்பு, காகிதக் கோட்டையாகிவிடும்!

உடலியல் ரீதியான கெடுதல்களோடு, உளவியல் ரீதியான பாதிப்புகள் ஏராளம்!

உயர்ந்த குணங்களும் அடியோடு பாழாகும்!

அண்மையில் நடந்த ஒரு சம்பவம் -

திருவள்ளூருக்கு அருகில், ஒரு கிராமம்.

போதைக்கு அடிமையான ஓர் இளைஞன், தன்னுடைய தாயிடம் குடிப்பதற்குக் காசு கேட்டான்..

அவள் 'இல்லை' என்று சொல்லி, அவனைத் திருத்துவதற்கு அறிவுரை கூற, காசு கிடைக்காத கோபத்தில் அவன் தாயைத் தடியால் அடித்தான்!

தந்தை வந்து தடுத்து, தடியைப் பறித்துக் கொள்ள-

மேலும் ஆத்திரம் கொண்ட அவன், அருகிலிருந்த கடப்பாரையால் தந்தையை அடித்தான்!

தாயும், தந்தையும் அதே இடத்தில் உயிர் விட்டார்கள்!

போதைப் பழக்கத்தின் கொடுமையால் நிகழ்ந்த கோரமான விளைவு இது!

தற்காலிகச் சுகத்திற்கு அல்லது மயக்கத்திற்கு, தனது எதிர்காலத்தையே இருட்டடிப்புச் செய்து கொள்கிற போதை அடிமைகளை எப்படி மீட்பது?

தேக்கு மரங்களாக வளர வேண்டியவர்கள், இப்படி முருங்கை மரங்களாக முறிந்து போக விடலாமா?

மேதைகளாக வரவேண்டியவர்கள், போதையிலே மூழ்கிப் பிஞ்சிலேயே வெம்பிப் பேதைகளாக விடலாமா?

அவர்களை நெறிப்படுத்தி, நேர்ப்படுத்தி, சரிப்படுத்தும் பொறுப்பு நம்முடையதல்லவா?

சுடர்விட வேண்டிய மாணவப் பருவம், போதைப் பழக்கங்களால் சூனியமாகப் போகவிடாமல் -

புடம் போட வேண்டிய இளமைக்காலம் புரையோடிப் போக விடாமல் -

போதைக் கிறுக்கில் வேதாளங்களாக மீண்டும் மீண்டும் முருக்கை மரம் ஏறும் அவர்களை -

மெது மெதுவாக, முயற்சிகளால் மீட்க வேண்டும்.

பாதிக்கப்பட்ட இளைஞர்களிடம் இதமாகப் பேசி, இணக்கமாகப் பழகி, பதமாக அணுகிப் பக்குவப்படுத்த வேண்டும்!

அவனுடைய ஆர்வத்தையும் கவனத்தையும் திசை திருப்பி, பல்வேறு செயல்பாடுகளில் ஈடுபடுத்த வேண்டும்.

முன்னதாகவும், முதன்மையானதாகவும் மேற் கொள்ள வேண்டிய பணி -

'போதை அடிமை'யின் பாதிப்பு நிலைமைக்கேற்ப, உடலளவில் மேற்கொள்ள வேண்டிய சிகிச்சைகள் -

உளவியல் அளவில் தீர்க்கப்பட வேண்டிய சிக்கல்கள் -

மருத்துவர் மற்றும் உளவியல் வல்லுநர்கள் மூலம் மேற்கொள்ள வேண்டிய தக்க நடவடிக்கைகள் என -

மருத்துவர்களுடன் தொடர்பு கொண்டு 'மருத்துவமுகாம், கருத்தரங்குகள்' ஏற்பாடு செய்யலாம்.

பெற்றோர் விழிப்புணர்வு மூலம் நலப்பணிகள் ஆற்றலாம்.

இவ்வாறு, 'போதைப் பொருள் அடிமைகளின்' மீட்புக்கும் காப்புக்கும் வழி வகுக்கலாம்.

இதனைச் சமுதாயத் தொண்டாக ஏற்று -

பாதிக்கப்பட்டுள்ள இளைஞர்களுக்கும், வயோதிகர்களுக்கும் கூட வழிகாட்டி உதவுவது அரிய சேவையாக அமையும்!

நம்பிக்கையும், தன்னம்பிக்கையும் உள்ள நற்குடி மகன்களாக - மகான்களாக உருவாக்க முயல்வோம்.

'பதர்நெல்' அல்ல - இளைஞர்கள் அனைவரும் 'விதைநெல்' என்பதை விளைத்துக் காட்டுவோம்!

## போதைப் பத்து

1. வாழ்க்கை என்பது கேளிக்கை - இது
வாலிப வயதில் வாடிக்கை; என
சீழ்க்கை அடித்துப் பாடுகிறாய் - சில
சில்லரைச் சுகங்கள் தேடுகிறாய்!

2. திரிந்த பாலின் சுவைதேடி - தினம்
திரியும் பால்நீ ஏன் மோகம்?
புரிந்து கொண்டே பாழாகும் - நீ
போதைக் கிறுக்கில் வேதாளம்!

3. உதிரம் ஓடும் நரம்பெல்லாம் - உன்
உடலின் சிவப்பு நதியாகும்!
மதுவாய்க் காலாய் மாறுகையில் - அது
மரணம் வருகிற வழியாகும்!

4. மரணத் தரகர்கள் மாத்திரைகள் - வெறும்
மாயச் சுகம்தரும் நோய்விதைகள்
புரட்டும் அழுக்குப் பொய்மான்கள் - உன்
புலன்களை அழிக்கும் கரையான்கள்!

5. அரும்பும் நாற்றங் காலுக்கு - தினம்
அக்கினித் திராவகப் பாசனமா?
சுருங்கிச் சுயஒளி மங்கிவர - ஒரு
சூரியப் பிஞ்சு வெம்புவதா?

6. பகைக்கஞ் சாஉனை விழ்த்தவரும் - பெரும்
பகை - கஞ்சா; அதன் உறவெதற்கு?
புகைக்குச் சாய்கிற கொடிமரமா? - நீ
போதையில் சரிகிற கோபுரமா?

7. முப்பதைத் தொடுமுன் மூப்புதொட - உன்
மூச்சில் முதுமை வரலாமா?
தப்புகள் வந்து தங்கிவிட - உன்
தசையின் முகவரி தரலாமா?

8. நெடுவான் தொடுகிற உன்மேனி - அது
நெருப்பின் மேய்ச்சல் நிலமல்ல;
புடம்போ டத்தான் இளம்பருவம் -இது
புதைகுழி போகும் வயதல்ல!

9. நிமிரத்தான் உன் நிகழ்காலம் - நீ
நேரம் மறந்த கடிகாரம்!
சமயம் இதுதான் களையெடுக்க - நீ
சாதனை புரிந்து தலையெடுக்க!

10. புல்லைத் தொட்டுப் பூவாக்கி - வெறும்
புழுதியை உழுது பொன்னாக்கி
கல்லைப் பிளந்து நீரெடுப்போம் - வா
காற்றைப் பிழிந்து சாறெடுப்போம்!

# 9

# கல்வியில் பெரியன்

*'கல்வி சிறந்த தமிழ்நாடு - புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு'*

என்று மகாகவி பாரதி, கல்வியையும் கம்பனையும் தொடர்பு படுத்தியிருப்பதை எண்ணிப் பார்க்கிறேன்.

'கல்வியில் பெரியன் கம்பன்' என்று சான்றோர் புகழ்வர். கல்வியின் உச்சகட்டச் சிறப்பு, கம்பனின் மெச்சத்தக்க படைப்பு. கம்பன் என்கிற வைரக்கல்லை எடைபோட்டுக் காட்டுவது, கல்வி என்கிற எடைக்கல்.

காவியப் பாதையில் கம்பன் பெருமைக்குரிய மைல் கல் என்பது, தமிழ்நாட்டுக் கல்விக்குக் கிடைத்த சிறப்பு.

**இராமாயணம்**

இது, உலக நாடுகளில் 'அமர இலக்கியங்கள்' என்று போற்றப்படும் உன்னதமான வீரகாவியங்களுள் உயர்ந்த காவியம்.

வான்மீகி வடமொழியில் படைத்ததைக் கம்பன் வாடா மொழியில் படைத்தான்.

கம்பனின் கவித்திறம், தனித்திறம் மிக்கது.

அவனது மொழித்திறம், பக்தி பவித்திரமானது.

இராமாவதாரம் -

கம்பன், இராமன் மீது கொண்ட விசுவாசம் - இந்த இதிகாசம்.

காவிய நாயகன் இராமனுக்குக் கவிதை நாயகன் பொறுப்போடு செதுக்கிய செப்பேடு, இராமாயணம்.

திருமால் பாற்கடல் கடைந்து அமுதெடுத்தான்; அது கால அமுதம்.

தேரழுந்தூர்க் கம்பன் பாக்கடல் கடைந்து அமுதெடுத்தான்; இது கவியமுதம்.

ஓலைச்சுவடிகளில், பரந்தாமனின் பாதச்சுவடுகளைப் பதிவு செய்தவன் கம்பன். அந்த மூலத்தைப் பாடி, காலத்தை வென்று நிற்பவன் அவன்.

கவியரசு கண்ணதாசன் கம்பனைப் பாராட்டிய வரிகள் இவை:

*காலமென்னும் ஆழியிலும்*
*காற்று மழை ஊழியிலும்*
*சாகாது கம்பனவன் பாட்டு - அது*
*தலைமுறைக்கு எழுதிவைத்த சீட்டு.*

*பத்தாயிரம் கவிதை*
*முத்தாக அள்ளிவைத்த*
*சத்தான கம்பனுக்கு ஈடு - இன்னும்*
*வித்தாக வில்லையென்று பாடு!*

கம்பன் கவிஞர்களின் கொடிமரம்; அவன் கவிதைகள் தமிழுக்கு அடியுரம்!

அருவிப் பெருக்காய் வார்த்தைகள்!

ஆற்றுப் பெருக்காய் உவமைகள்!

பூங்கவிதையா? புயற்கவிதையா?

தேன்கவிதையா? தீக்கவிதையா?

காதலைப் பாடுகையில், பூச் செண்டுகள்!

சொற்செண்டு ஒவ்வொன்றும், சுவையான கற்கண்டு!

'கம்ப நாடன் கவிதை போல், கற்றோர்க் கிதயம் களியாதே!'

இது, உண்மை!

நேற்றுப் படித்தால் ஒரு நயம்...

இன்று படித்தால் புதுச்சுவை...

தினமும் படித்தால் தேன்மழை!

கம்பனின் இரத்தத்தில் மையங் கொண்ட இராமகாதை, விருத்தத்தில் ஊற்றெடுத்தது.

வான்மீகியை அவன் அப்படியே நகல் எடுக்கவில்லை.

மொழி பெயர்ப்பின்போது , கம்பனின் தமிழ் நரம்பு சில வரம்புகளைப் போட்டுக் கொண்டது.

இந்த மண்ணின் மரபுக்கேற்ப -

கதை நிகழ்வுகளில், கதை மாந்தர் படைப்புகளில் உரிய மாற்றங்கள் செய்து உயர்த்தினான்.

திருமாலின் எட்டாவது அவதாரத்திற்கு -

கம்பன் சூட்டிய மணியாரம், இராமாயணம்.

இது -

அந்த மகாகவி வழங்கிய மங்களாசாசனம்!

மணித்தமிழ் அன்னைக்குச் சிம்மாசனம்!

கம்பராமாயணம், வெறும் போற்றி அகவல்களின் தொகுப்பு அல்ல; புராணத் தகவல்களின் படைப்பு அல்ல.

அது-

எத்தேசத்திற்கும் பொருந்தும் ஒரு உத்தேச உலகைக் காட்டும் உலகியல் பதிப்பு.

**சமுதாயம்**

ஓர் அவதார மகிமையைப் பாடும்போது, கம்பனிடம் சமயக் கண்ணோட்டம் மட்டுமே இருக்கவில்லை, சமுதாயக் கண்ணோட்டம் இருந்தது.

வாழ்வியல் உண்மைகள், மனித நேய மேம்பாடு, தமிழர் பண்பாடு, தேச ஒருமைப்பாடு எல்லாவற்றையும் சிந்தித்து - சிந்தனைகளைச் சேமித்து, இந்த வீரகாவியம் முழுக்க விதைத்திருக்கிறான்!

தெய்வபக்தியோடு, தேசபக்தியையும் இணைத்துப் பாடியவன் கம்பன்.

புராணம் என்றால், பழைமை. ஆனால் புராணத்தில் புதுமைகளைப் புகுத்தியவன் கவிச்சக்கரவர்த்தி!

'நாடென்ப, நாடா வளத்தன' என்பது போல்,கோசல நாட்டில் -

*'எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்தலாலே*
*இல்லாரும் இல்லை; உடையாரும் இல்லை மாதோ!'*

இந்த வரிகள் மூலம், சமுதாயத்தில் பொதுவுடைமை நிலவியதைப் புரிந்துகொள்ள முடிகிறது!

**மொழி - நாடு**

மொழிப்பற்றில் கம்பன் எந்தப் புலவனுக்கும் சளைத்தவனில்லை.

அகத்தியர் பற்றிக்கூறும் போது, 'என்றுமுள தென்றமிழ் இயம்பியிசை கொண்டான்' என்று குறிப்பிடுகிறான்.

'நீண்ட தமிழால் உலகின் நேமி அளந்தான்' என்று இன்னொரு பகுதியில் பேசுவான்.

'என்றுமுள தென்றமிழ்' - 'நீண்டதமிழ்' என்கிற தொடர்கள், கம்பனின் மொழிப்பற்றுக்குச் சான்று கூறுபவை.

'தழற்புரை சுடர்க்கடவுள் தந்த தமிழ் தந்தான்' என்று, மற்றொரு இடத்தில் கம்பன் சுட்டிக் காட்டுகிறான்.

காப்பியத் தொடக்கத்தில் வடமொழியைத் 'தேவ பாஷை' என்று கூறும் கவிச்சக்கரவர்த்தி, தென்மொழி தமிழும் தெய்வம் தந்த மொழியே என்பதை உணர்த்துகிறான்:

'கடவுள் தந்த தமிழ்'

நாட்டுப்பற்று-கம்பனின் நாடி நரம்புகளில் துடித்துக் கொண்டிருந்தது.

கோசல நாட்டு வளப்பத்தைக் கூற வரும் இடத்தில், 'காவிரியன்ன கழனிநாடு' என்று, காவிரி பாயும் கன்னித் தமிழ்நாட்டை உவமைப்படுத்தி உயர்வு செய்வதைக் காணலாம்.

**கல்வி**

கோசல நாட்டு வளம் பற்றிக் கூறுகையில் -

கல்வி வளம் பற்றிய கவிதைகள் நம்மை வியக்க வைக்கின்றன.

அங்கே கல்லாதவரே இல்லையாம்!

'கல்லாது நிற்பார் பிறர் இன்மையின் கல்வி முற்ற வல்லாரும் இல்லை; அவை வல்லார் அல்லாரும் இல்லை!'

ஆடவர்க் கல்வி மட்டுமல்ல; மகளிர்க் கல்வியும் மகத்தானதாக இருந்தது.

பாவேந்தர் குறிப்பிடுவது போல -

'கல்லாத பெண்கள் களர்நிலம் - அங்கே

புல் விளைந்திடலாம் - நல்ல புதல்வர்கள் விளைவதில்லை'

என்கிற நிலைமை இல்லை.

*'பெருந்தடங்கண் பிறைநுதலார்க்கு எலாம்*
*பொருந்து செல்வமும் கல்வியும் பூத்தலால்'*

பெண்கல்வி பெருமை மிக்கதாயிருந்தது.

கம்பன் காட்டும் நாட்டில்-

கல்வியிலும் செல்வத்திலும் மகளிர்க்குச் சமவுரிமை!

*'வாழி கல்வி செல்வம் எய்தி ஆண்களோடு*
*பெண்களும்*
*சரிநிகர் சமானமாக வாழ்வம் இந்த நாட்டிலே'*

என்ற பாரதியின் கனவு அன்றே நனவாகி இருந்தது!

இந்த நூற்றாண்டிலும், தற்போது நம் தமிழ் நாட்டில் - கம்பன் சுட்டிக் காட்டிய கல்வி முன்னேற்றத்தை நாம் எட்டிக் கொண்டிருக்கிறோம் எனத் தலைநிமிர்ந்து கூறமுடியும்.

கல்லூரிக்கல்வி, தொழில்-தொழில்நுட்பக் கல்வி, பள்ளிக் கல்வி, முறைசாராக் கல்வி, வயதுவந்தோர் கல்வி, பெண்கல்வி, அறிவொளி இயக்கம் முதலான அணுகுமுறைகளால் - 'பயிற்றிப் பல கல்வி தந்து' நூறு விழுக்காட்டுக்கான வெற்றியின் இலக்கை எட்டிக் கொண்டிருக்கிறோம்.

கல்விவளம், தொழில்வளம் இவற்றின் பெருக்கத்தில் கோசல நாடு தன்னிறைவு பெற்றிருந்த காட்சிகளைக் கம்பன் தொடர்கிறான்:

மக்கள் வாழ்க்கை வளம் - மனவளம் போலவே மண்வளம் செழித்திருந்ததைச் சில நிகழ்ச்சிகள் மூலம் படம்பிடித்துக் காட்டுகிறான்...

**வயற் பண்ணை**

இதோ, பச்சை வயல்வெளி -

வெள்ளை அன்னங்கள் வயல் உலா வருகின்றன. பண்ணை வயலெங்கும் தாமரைப்பூக்காடு. அன்னப் பறவைகள், தம் குஞ்சுகளைத் தாமரைப் பூ இதழ்களில் கிடத்திவிட்டு இரை தேடிச் செல்கின்றன.

அன்னக் குஞ்சுகள் பசியால் அரற்றுகின்றன.

வயல்களில் நடமாடும் எருமைகளுக்குத் தம் கன்றுகளின் நினைவு வர, அவற்றின் மடிகளில் பால் சுரக்கிறது. சுரந்த பாலை அன்னத்தின் குஞ்சுகள் குடித்துவிட்டுத் தூங்கத் தொடங்குகின்றன.

அந்த வேளையில் பச்சைத் தேரைகள் குரலெழுப்புகின்றன, ஆராரோ பாடுவதைப்போல!

அன்னக்குஞ்சுகளுக்கு எருமைகள் பாலூட்ட, தேரைகள் தாலாட்ட....

அடடா! அற்புதமான காட்சி!

வெவ்வேறு உயிரினங்கள் எனினும், இயல்பாக அவற்றுக்குள்ளே எத்தகைய ஒருமைப்பாடு! அஃறிணை உயிர்களைக் காட்டிக் கம்பர் பாடுகின்றார் :

*'சேலுண்ட ஒண்கணாரின் திரிகின்ற செங்கால் அன்னம்*
*மாலுண்ட நளினப் பள்ளி வளர்த்திய மழலைப் பிள்ளை*
*காலுண்ட சேற்றுமேதி கன்றுள்ளி கனைப்பச் சோர்ந்த*
*பாலுண்டு துயிலப் பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை '*

ஒன்றுபட்டு வாழும் மேன்மையை, ஒருவர்க்கொருவர் உதவிக்கொள்ளும் மனப்பான்மையை எத்தனை அருமையாகப் புலப்படுத்துகிறது இந்தப் பாடல்!

ஆறறிவுக்குக் குறைந்த உயிரினங்களைக் கொண்டே ஒருமைப்பாட்டுக்கு அரிச்சுவடி எழுதுகிறான் கம்பன்!

ஒருவர்க்கு ஒருவர் பயன்கருதாமல் செய்து கொள்ளும் உதவி...

கைம்மாறு வேண்டா கடப்பாடு...

**மேக வள்ளல்**

விண்ணிலே ஒரு வெண்மேகம்...

இந்த மேகம் ஏன் வெளுத்திருக்கிறது?

தன்னிடம் இருந்த செல்வம் முழுவதையும் வறியவர்க்கு வாரி வழங்கிய வள்ளல் ஒருவன் , இனிமேல் வருபவர்க்குக் கொடுக்க ஏதுமில்லை என்கிற நிலைமை ஏற்படும் போது முகம் வெளுத்துப் போவதைப் போல் -

இந்த மேகம், தன் வசமிருந்த மழையை மண்ணுக்கு வழங்கிவிட்டு, 'இனிமேல் மண்ணுக்கு வழங்கக் கையிருப்பு இல்லையே' என முகம் வெளுத்துப் போனதாம்!

வாரி வாரி மாரியை வழங்கிவிட்டு, இப்போது நிறம் மாறி நிலைகுலைகிறதாம்! எத்தனை நுட்பமான கருத்து இது!

**மக்கள் உயிர்**

நாட்டின் தலைவன் மன்னன். மன்னராட்சிக் காலத்தில், சங்க காலம் தொட்டு, 'மன்னன் உயிர் - மக்கள் உடல்' என்கிற நிலை இருந்தது.

***'நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே***
***மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்'***

7.

இந்தக் கருத்தை, அடியோடு மாற்றுகிறான் கம்பன்.

*'வையம் மன்னுயிர் ஆகவும் அம்மன்னுயிர்*
*உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்'*

என்று பாடுகிறான்.

'மக்கள் உயிர் - மன்னன் உடல்'

'உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்' என்று தசரதனைக் குறிப்பிடுவான்.

குடியாட்சி தழுவிய கோனாட்சி அமைய வேண்டும் என்பதற்குப் புரட்சி விதை ஊன்றியவன், கம்பன்!

**சரிநிகர் சமம்**

ஒரு தாய் வயிற்றில் உதித்தவர்கள் மட்டும்தான் சகோதர பாசத்துடன் உலவ முடியும் என்கிற கருத்தை, இராமாயணம் ஏற்றுக் கொள்ளவில்லை. குறிப்பாகக் கம்பன் மொழி பெயர்ப்பில் - குகன், சுக்ரீவன், வீடணன் மூவரும் இராம பெருமானிடம் தோழமை கொள்ளுவதை சகோதர பாசமாகவே மிக நேர்த்தியாகக் காட்டுகிறான்.

மனித இனத்தில், வேட்டுவர் குலத் தலைவன் குகன் மிகவும் கீழினமாகக் கருதப்பட்டு வந்த இனத்தைச் சேர்ந்தவன். கள்ளமற்ற அவன் அன்பை உள்ளம் முற்ற ஏற்று-

''நின்னொடும் ஐவரானோம்'' என, உடன்பிறப்பாக்கிக் கொள்கிறான் கம்பன்.

விலங்கு இனத்தில் பிறந்தவன் சுக்ரீவன்-அவனுக்கு அடைக்கலம் தருகிற இராமன் அவனைத் தம்பியாக ஏற்கிறான்: ''நின்னொடும் அறுவரானோம்...''

அரக்க இனத்தைச் சேர்ந்த வீடணனிடம்-

''நின்னொடும் எழுவரானேம்'' என்று கூறி ஏற்கிறான்.

மனித இனத்தில் கீழ்ப்பிறப்பு - விலங்கு இனத்தில் இழிபிறப்பு - அரக்க இனத்தில் பழிப்பிறப்பு என ஒதுக்காமல், தம்பியராக ஏற்கும் தறுகண்மை!

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் சங்கப்பாடல் கம்பனை உந்தித் தள்ள அருமையாகப் படம் பிடித்துக் காட்டுகிறான்.

''விஷ்ணு பக்தியுடையவர் எந்தக் குலத்தவர் ஆனாலும் சமமாகப் போற்றுதற்குரியவர்'' என்கிற இராமானுசரின் கருத்தாக்கம் கம்பனின் தாக்கம்.

சகோதர பாச வலிமை -

சரணாகதி தத்துவம் -

பிறன் மனை நயவாத பேராண்மை-

இந்த மூன்று அடிப்படை உண்மைகளே, இராமாயணத்தின் இலக்குகள்.

**கதை மாந்தர்**

கம்பன் கதை மாந்தர்களைப் படைத்திருக்கும் பாங்கு குறிப்பிடத்தக்கது.

சமன் செய்து சீர்தூக்கும் கோல்போல் ஒவ்வொரு கதாபாத்திரத்தையும் உளவியல் நுட்பத்தோடு படைத்திருக்கிறான்.

படைப்பாளி, கதைமாந்தரின் தாயை ஒத்தவன்.

நல்லவன் , அல்லவன் , தீயவன், தூயவன் என்கிற பேதமின்றி- கதாபாத்திரங்களை நுட்பமாகச் செதுக்கியிருப்பது கம்பனது நடுநிலைமைக்குச் சான்று.

இராமாயணம் பயில்வோர், குறிப்பாகக் கம்பனின் வரிகளில் தோய்வோர், அவன் காட்டிய வாழ்வியல் நெறிமுறைகளைக் கடைப்பிடிக்க வேண்டியது அவசியம்!

அந்த நடப்பியலை, உலகியலாக்குவது அவசரம்!

# 10

## விரல் நுனி வெளிச்சங்கள்...

வெறுங்கை என்பது மூடத்தனம் - உன்
விரல்கள் பத்தும் மூலதனம்!



பூமிப்பந்து என்ன விலை? - உன்
புகழைத் தந்து வாங்கும் விலை!



விழிவிழி உன்விழி நெருப்புவிழி - உன்
விழிமுன் சூரியன் சின்னப்பொறி!



விரத்தி என்னும் சிலந்தி வலைக்குள்
வேங்கைப் புலிநீ தூங்குவதா?



எழுஎழு தோழா உன் எழுச்சி - இனி
இயற்கை மடியில் பெரும்புரட்சி!

□

சோற்றுக்கா உன்னுடம்பு?
சோம்பலுக்கா நீ விருந்து?

□

காற்றுக்குப் புதிய திசை
காட்டலாம் வா எழுந்து!

□

உழைக்க வேண்டிய விரலிடுக்கில்
ஒட்டடை படிய விடலாமா?

□

சோர்வுகள் நமக்குப் போர்வைகள் அல்ல;
வேர்வையும் உழைப்புமே வேட்டி சட்டைகள்!

□

புடம் போடத்தான் இளம் பருவம் - அது
புதைகுழி போகும் வயதல்ல!

□

முப்பதைத் தொடுமுன் மூப்புத் தொட - உன்
மூச்சில் முதுமை வரலாமா?

□

தப்புகள் வந்து தங்கிவிட - உன்
தசையின் முகவரி தரலாமா?

□

விரைகவிரைக உன் விரல்கள் உழுபடை;
தரிசு நிலங்களில் தங்க அறுவடை!

தசைக ளுக்குக் கொஞ்சம்
தன்மானப் பயிற்சி கொடு!

□

எத்தனை உயரம் இமயமலை - அதில்
இன்னொரு சிகரம் உனதுதலை!

□

சுட்டு விரல்நீ சுருங்குவதா - உன்
சுயபலம் உனக்குள் ஒடுங்குவதா?

□

தோள்கள் உனது தொழிற்சாலை - நீ
தொடுமிடம் எல்லாம் மலர்ச்சோலை!

□

எத்தனை ஞானியர் பிறந்த தரை - நீ
இவர்களை விஞ்சிட என்ன தடை?

□

வெறுமை இந்த உலகென்று - ஒரு
விரக்தி உனக்கு வரலாமா?

□

சுழலும் பூமியின் சுழற்சி விசையை
எழுதி இயக்கும் கட்டைவிரல் நீ!

□

சூரியத் தேரின் சுழற்சியை மாற்றும்
வீரிய சக்தி உன் விஞ்ஞான சக்தி!

என் உயரம் இதுவென்று எழுந்துநில்!
விண்ணுயரம் கூட உன்
விலாவுக்குக் கீழேதான்!

☐

நெஞ்சக் கதவைத் திறந்துவிடு
நேசக் காற்று வீசட்டும்!

☐

நேற்றைய பகைமை இனி எதற்கு - உன்
நிழலின் மீதா வெறுப்புனக்கு!

☐

குண்டுகளைக் குழிதோண்டிப் புதை;
தொண்டுகளைத் தோளில் விதை!

☐

போர்த் துப்பாக்கியைப் பூமியில் நட்டுவை
பூங்கொடியை அதன் மேலே சுற்றிவை!

☐

தோப்பு மரங்கள் நாம் யாரும்! - ஒரு
தொப்புள் கொடிதான் ஆதாரம்!

☐

குண்டுகள் பொழியும் பீரங்கி வாயில்
வெண்புறாப் பேடை முட்டையிடட்டும்!

☐

மலர்க மலர்க உன் மனித உறவுகள்;
உலகின் கூரையில் உனது சிறகுகள்!

தொப்புள் கொடிகள் வேறாகும்;
தேசியக் கொடிநம் வேராகும்!

□

விட்டுத்தள்ளு இன்னுமென்ன விரக்தியுனக்கு? - புது
விடியலுக்கு நம்பிக்கைதான் பச்சை விளக்கு!

□

உன்னை உயர்த்தும் நம்பிக்கை - இந்த
உலகை உயர்த்தும் உந்தன்கை!

□

நம்பிக்கை வந்தால் போதும்
நம்கைகள் வானை மோதும்!

□

உலகம் முழுதும் ஒரு பகலை - இனி
உழைக்கும் தோள்கள் ஒளிபரப்பும்!

□

தொற்றிய சோம்பலைத் தூக்கியெறி;
தோள்களில் பூமியைத் தாங்கிப் பிடி!

□

சொந்த மாகத் தொழில் தொடங்கு!
சுற்றுமிப் பூமி உனைத் தொடர்ந்து!

□

வெற்றியை எட்டும் நோக்கமிருந்தால்
ஒற்றைச் சிறகிலும் பறக்கலாம்!

## மனித முத்திரை

□ மலர்மகன்

தம்பி, தாராபாரதி -
பிறப்பில் நானும் நீயும்
மோனை எதுகை - கவிதைச்
சிறப்பில் நீயும் நானும்
எதுகை மோனை என
இடம் மாறிவிட்டோம்!

நானும் நீயும் - ஒருதாய்
வயிற்றுப் பிள்ளைகள்!
நான் குடித்த தாய்ப் பால்தான்
நீயும் குடித்தாய்!
எச்சிற் பாலை - உனக்கும்
மிச்சம் வைத்தேன் என்பதாலா
என்னை - உன்
மிச்சமாக வைத்துப் போனாய்?

எனக்கும் தம்பிக்கும் - நீ
இடைநிலையானாய் - இன்றோ
இடைவெளி ஆனாய்!

தம்பி, 1965 - நீ
ஆசிரியனாகப் பிறப்பெடுத்து
அப்பணிக்கே உன்னை
அர்ப்பணித்துக் கொண்டபோது -

அந்த ஊரில்,
தொழுவம் போலொரு
கொட்டகையைத்
தொடக்கப் பள்ளி என்று
உன்னிடம் ஒப்படைத்தார்கள்!
நீ - அதைத்
தொழத் தக்க இடமாய்
தூய்மைப் படுத்தினாய் - அந்தப்
பள்ளித் தலமனைத்தும்
கோயிலாக்கினாய்!

பிட்டுக்கு மண்சுமந்தவன் போல
பள்ளிக் கட்டுமானத்துக்கு
மற்றவரோடு நீயும்
மரம் - கல்
மண் சுமந்தாய்!

தம்பி, தாராபாரதி -
சின்னப் பிள்ளை நீ - என்று
நினைத்தவர்களுக்கு - நீ
'கின்னஸ்' பிள்ளை என்று
காட்டினாய்!

சேர்க்காத ஊரும்
சேராத சேரியும்
சேரும் பள்ளி - அங்கு
தீண்டாமை வட்டத்திற்கு - நீதான்
தொடு கோடு வரைந்தாய்!

பள்ளி - விழா மேடைகளில் பண்ணைச்
சமஸ்தானங்களுக்குப் பக்கத்தில்
அரிசனங்களுக்கும்
சம - ஸ்தானம் கொடுத்தாய்! அந்த
மேடைத் தீட்டுக்கு
மேன் மக்கள் அதிர்ந்தனர்!
அதனால்,
ஊர்ப்பகை கூட
உன்பகை ஆனது! - இப்படி
மேட்டுக் குடிகளையும்
குப்பை - மேட்டுக் குடிகளையும்
கூட்டி வைத்துப் பழக்கினாய்
சமத்துவக்
கொள்கை முழங்கினாய்!

தம்பி, தாராபாரதி -
ஊர்-வலத்தைவிட - உன்
சேரி வலம்தான் பிரபலம்!
சேரித் திருமணங்களில்
நீ தான் தலை - அங்கு
உனக்குத்தான் முதல் இலை!
பள்ளி முடிந்தால்,
மாலை முழுதும்
அச் - சேரிக் குழந்தைகளுடன்தான்
உன் கச்சேரி!

அறியா சனங்களான - அந்த
அரிசனக் குழந்தைகளை - 'கல்வி
அறிசனங்களாக்கி' - ஒரு
அடையாளம் காட்டினாய்
அங்கீகாரம் பூட்டினாய்!

அந்த - முதல் பள்ளியையும்
அதற்குப் பிறகு பணிபுரிந்த
அடுத்த இரு பள்ளிகளையும்
மாதிரிப் பள்ளிகளாக்கி
மதிப்புயரச் செய்தாய்!

உன் தலைமை வேலை - வெறும்
மை வேலை அல்ல
'மைதாஸ்' வேலை என
நிரூபித்தாய்! - ஆம்,
அது, பள்ளிகளின்
பொற்காலம் ஆனது!

தம்பி, தாராபாரதி -
சாதிகளை மறந்து
சமுதாயம் நினைத்தவன், நீ!
மதங்களை ஒதுக்கி
மனிதம் மதித்தவன்! ஆம்
மனிதநேயம் - உன்
மகத்தான பண்பு!
மனிதன் என்றால்
யாரிடமும் அன்பு -

முகத்திரை இல்லாத - மனித
முத்திரை உன் முகம்!
சுகத்துறைச் சிரிப்பைச்
சுரந்திடும் இன்முகம்! - எம்
மனத்திரை விட்டு
மாறுமா உன்முகம்!

தம்பி, தாராபாரதி -
நீ ஓர் ஆசிரியன் -
தமிழக அரசின் 'நல்லாசிரியர்'
விருது பெற்றவன்!
நீ சிறந்த கவிஞன்
இலக்கிய வீதியின்
'கண்ணதாசன் விருது'ம்
திருவள்ளுவர் மன்றத்தின்
'கவிஞாயிறு' விருதும்
பெற்றவன்.
நீ மிகச் சிறந்த மனிதன்!
உற்றார், ஊரார்
உலகோரின்
கண்ணீர் விழுதுகளை
விருதுகளாய்ப் பெற்றவன்!
உன்
புகழின் விலையால்
பூமிப்பந்தை
விலைபேசக் கற்றவன்!

வாழ்க உன் புகழ்!

அண்ணன்

மலர்மகன்



# வாழும் வரலாறு:

இலக்கியவீதி தலைமுறையின் தலைமைக் கவிஞர்

## கவிஞாயிறு தாராபாரதி

- மண்ணில் கண் மலர்ந்த நாள் : 26.02.1947
- தொட்டில் பெயர் : துரை. இராதாகிருட்டிணன்
- சுட்டுப் பெயர் : தாராபாரதி
- அன்னை வயல் : புஷ்பம்
- தந்தை நிலம் : துரைசாமி
- தவழ்ந்த மண் : குவளை (திருவண்ணாமலை மாவட்டம்)
- கவிதை நடைவண்டி : இலக்கியவீதியில்
- மணந்த நாள் : 22.08.1974
- இல்வாழ்க்கைத்துணை : சந்தானலட்சுமி
- பிள்ளைத்தமிழ் : விவேகானந்தன்<br>லோகுதுரை<br>ஆண்டாள்
- உடன் பிறப்புகள் : துரை. சீனிவாசன் (மலர்மகன்)<br>புலவர் துரை மாதவன்
- கற்ற கல்வி : தொடக்கநிலை - குவளை<br>உயர்நிலை - கீழ்க்கொடுங்காலூர்
- ஆசிரியர் பயிற்சி : இராணிப்பேட்டை<br>சைதாப்பேட்டை
- ஊனமுற்றோர் சிறப்புப் பயிற்சி : மைசூர்
- பெற்ற பட்டங்கள் : பி.ஏ. (வரலாறு), எம்.ஏ. (தமிழ்) பி.எட்.
- தொழில் : ஆசிரியப் பணி
- விருது : டாக்டர் ராதாகிருஷ்ணன் விருது (தமிழக அரசு - 2000)
- பணிக்காலம் : 34 ஆண்டுகள்
- பணியாற்றிய பள்ளிகள் : சித்திரக் கூடம் (அச்சிறுப்பாக்கம் ஒன்றியம்)<br>பரனூர் (காட்டாங்குளத்தூர் ஒன்றியம்)<br>காமராசபுரம் - கூடுவாஞ்சேரி

- குறிப்பிடத்தக்க செயல்கள் : இந்த மூன்று பள்ளிகளையும் ஒன்றியத்தின் சிறந்த முன் மாதிரிப் பள்ளிகளாக உயர்த்திப் புகழ் பரப்பியமை.
  மாணவர்களின் பன்முகத் திறன்களையும் வளர்க்கும்கலைக்கூடங்களாகப் பள்ளிகளைப் பயன்படுத்தியமை.

  தாழ்த்தப்பட்ட மாணவர்கள் மீது தனிக்கவனம் செலுத்தி உழைத்தமை, உயர்த்தியமை.

  ஊனமுற்ற மாணவர்களுக்காக உருகிக் கரைந்தமை, வாய்ப்புகளை உருவாக்கித் தந்தமை.

- கல்விப்பணி : புதிய பாடத்திட்ட உயர்மட்டக் குழுவில், ஆசிரியர் கையேடுகள் தயாரிப்பில், வினா வங்கி உருவாக்கத்தில் பங்கு பெற்றமை.

- வானொலி-தொலைக்காட்சி : கல்வி ஒலிபரப்புகள், எல்லோர்க்கும் கல்வி, சான்றோர் சிந்தனை, கவிதைத்துளி, கவியரங்கங்கள், கவிதைப் பட்டிமன்றம், வள்ளுவர் காட்டும் வழி, காண்போம் கற்போம், வாழ்க்கைக் கல்வி.
  சிறப்பு நிகழ்ச்சிகளில் பங்கேற்பு.
- சன் தொலைக்காட்சி : கவிராத்திரி (கவிக்கோ அப்துல் ரகுமானுடன்)
- இன்தாம் - தமிழ் இணையம்
  இவற்றில் கவிதைகள் வாசிப்பு
- பரிசுகள் - விருதுகள் :
  முதல் பரிசு - கல்லூரிக் கவிதைப் போட்டி
  வெள்ளிப் பதக்கம் - கல்லூரி கட்டுரைப் போட்டி
  தங்க மோதிரம் - தமிழ் எழுத்தாளர் சங்கம்
  (வாசவன் விருது)
  கண்ணதாசன் நினைவு விருது
  (இலக்கியவீதி)
  கவிஞாயிறு
  (திருவள்ளுவர் இலக்கிய மன்றம் - வாணுவம்பேட்டை)

காலத்தோடு கலந்த நாள் : 13.05.2000




கவிஞாயிறு

# தாராபாரதி

படைப்புகள்

புதிய விடியல்கள்

இது எங்கள் கிழக்கு

விவசாயம் இவர் வேதம்

☐ வேளாண்மாமணி க. முத்துமல்லா பற்றியது

பண்ணைப்புரம் தொடங்கி
பக்கிங்காம் வரை

☐ இசைஞானி இளையராஜா பற்றியது

விரல்நுனி வெளிச்சங்கள்

தாராபாரதி கவிதைகள்

பூமியைத் திறக்கும் பொன்சாவி

இன்னொரு சிகரம்



# வெற்றியின் மூலதனம்

கவிஞாயிறு தாராபாரதி

- கவிப் பணியில் நாடறிந்த தாராபாரதி , கல்விப் பணியில் ஆசிரியர் ; நல்லாசிரியர்!
- தமிழக அரசின் டாக்டர் இராதாகிருஷ்ணன் விருது (2000) பெற்றவர்.
- ஆசிரியப் பணியில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர். அன்பில் தாயுமானவர்; அரவணைப்பில் தந்தையானவர்!
- ஆசிரியராக அல்ல - அம்மையப்பனாயிருந்து கல்வி எனும் ஞானப்பால் புகட்டியவர்; அறிவமுதம் ஊட்டியவர்!
- இவர், மொழி உணர்வுக்கு வழிகாட்டிய தமிழாசிரியர்.
- மேல் - கீழ்க் கணக்கு, வர்க்கமூலம், மனித பின்னங்கள் உணர்த்திய கணக்காசிரியர்.
- ஆசிரியப் பணி என்பது, 'மாடு மேய்ப்பதல்ல... மாணவர்தம் நாடி பிடித்துப் பார்க்கும் விஞ்ஞான அணுகுமுறை' என நிரூபித்த அறிவியலாசிரியர்.
- பண்ணையில் 'படியாளாகலாம்' என்ற பரம்பரையை - 'படி... ஆளாகலாம்!' என்று படிப்படியாகப் படிப்புப் படிகளில் ஏற்றி உருப்படியாக்கிய சமூக ஆசிரியர்.
- சேரிக் கிடங்குகளில் ஊறிக் கிடந்த விதைகளை வகுப்பு வயல்களில் விதைத்து, கல்வி அறுவடை செய்த 'சொல்லேர் உழவன்!'
- பண்ணைப் பிள்ளைகளைப் பள்ளிப் பிள்ளைகளாக்கிய தந்திரசாலி; கூட்டுப் புழுக்களைப் பட்ட(ா)ம் பூச்சிகளாக மாற்றிய மந்திரவாதி!
- வகுப்பறை நாற்காலியில் உட்காராமல், மாணவர்தம் மன நாற்காலிகளில் அமர்ந்தவர்; அமர்ந்திருப்பவர்!




விநாயக நல்லூர்
வேடந்தாங்கல் - 603 314

இனியவன்
இலக்கியவீதி இனியவன்